ப - ரை. ஐ - (வீடடையக் கருதினேன்) ஐம், புலன் - புலன்களையும், அடல் - அடல், வேண்டும் - வேண்டும் (என்றும் அவ் வைத்தினையும் அதேதற்கு அவற்றால் அநுபவிக்க), வேண்டிய - விரும்பி வைத்த பொருள்கள், அனைத்தையும் - அனைத்தினையும், ஒருங்கு - ஒருங்கே, விடல் - விடல், வேண்டும் - வேண்டும், என்று - என்றும், உம்பரும் - தேவர்களும், பரவும் - தோத்திரம் பண்ணுகின்ற, ஒரு - ஒப் பற்ற, தமிழ் - தமிழ், வேதம் - வேத மாகிய (திரு வள்ளுவப் பயன்), உரைத்தலான் - கூறுதலின், இரு வகை ஆம் - (உயிர்ச் சார்பு பொருட் சார்பு என்று) இரு வகை யாய் உள்ள, நம் - நமது, புறச் சார்வை - புறச் வெறுத்து - (முன்னர்) வெறுத்து (த் துறந்து), அவா - அதன்கண் வைத்த) அவாவினை, அறுத்து - அறுத்து, ஐ - (பின்பு) பஞ்ச, புலன் - இந்திரியங்களையும், ஒழித்து - (விடயங்களைக் காணுந் தோறும் எழுந்து செல்ல வொட்டாது) உள் ளடக்கி, ஒழுங்கின் - இந்த முறையே (ஒவ் வொன்றாக நீத்துச் சென்று), நாட - (யாவராலும்) அறிதற்கு, அரும் - அரிய, அ - அந்த, செம் - செவ் விய, பொருள் - (மெய்ப்) பொருளை, காண்பது - அறிவது, அறிவு - ஞானம் (எனவும்), அறியாமை - (அந்த ஞானத்தால்) அஞ்ஞானத்தை, சிதைத்தல் - கெடுப்பது, வீடு - வீடு, என - எனவும், திகழ்தரும் - விளங்காநிற்கும், [ஆகலின், ஞானமும் வீடும் இவைக ளென்று அறிவாயாக], எ - று. ஆல் அசை.

பொ - ரை. எ - து. வீடடையக் கருதினேன் ஐம் புலன் களையும் அடல் வேண்டு மென்றும், அவ் வைத்தினையும் அதேதற்கு அவற்றால் அநுபவிக்க விரும்பி வைத்த பொருள்கள் அனைத்தினை யும் ஒருங்கே விடல் வேண்டு மென்றும், தேவர்களும் தோத்திரம் பண்ணுகின்ற ஒப் பற்ற தமிழ் வேத மாகிய திரு வள்ளுவப் பயன் கூறுதலின், உயிர்ச் சார்பு பொருட் சார்பு என் றிரு வகையா யுள்ள நமது புறச் சார்பினை முன்னர் வெறுத்துத் துறந்து, பின்பு ஆசை

கண் வைத்த அவாவினை அறுத்துப், பின்பு பஞ்சேந்திரியங்களையும் விடயங்களைக் காணுந் தோறும் எழுந்து செல்ல வொட்டாது உள் ளடக்கி, இந்த முறையே ஒவ் வொன்றாக நீத்துச் சென்று, யாவராலும் அறிதற் கரிய அந்தச் செவ்விய மெய்ப் பொருளை அறிவது ஞான மெனவும், அந்த ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுப்பது வீ டெனவும் விளங்காநிற்கு மாகலின், ஞானமும், வீடும் இவைக ளென்று அறிவாயாக, எ - று.

முன் பிரு வகைச் சார் பாகிய புறப் பற்றினை ஒழித்து, அதற்கு மேல் அதன்கண் வைத்த அவாவினை அறுத்து, அதற்கு மேல் காணப்பட்ட விடயங்களில் எழாமல் இந்திரிய நிக்கிரகம் பண்ணி, அதற்கு மேல் முன்னர் ஏறி யிருந்த காண வாதனையை ஒழித்து, அதற்கு மேல் ஈனவிற் சுழுத்தியைப் பெற்று, அதற்கு மேல் அஞ்ஞான நிவிருத்தி பண்ணி, அதற்கு மேல் சிவ தரிசனம் பண்ணி, அதற்கு மேல் பரை தரிசனம் பண்ணி, அதற்கு மேல் சிவ தரிசனம் பண்ணி, அதற்கு மேல் ஐக்கியம் கூட வேண்டுதலின், 'ஒருங்கி ஒடுங்குமச் செம் பொருள் காண்ப தறிவு' என்றார்.

'விடல் வேண்டு மொருங்கு வேண்டிய வனைத்தையும்' என்றதற்கு உதாரணம்: தேவிகாலோத்தரம். (31) "துக்கசுக மாசை வெறுப் பென்ற கட்டுந் துவக்குவங்க ளிரண்டவைபோற் சொலப் பட்ட, மிக்கதெய்வ மடவார்க டன்மா தன்ம மெய்ப்பலன்கள் வேறுவே றவைவ மன்றே, தொக்கவை மதுவாக்கும் பிறப்பை யாக்குந் தொடர்பெனவே துவிக்கத் தொடர்பை யாக்குந், தக்கபொருட் சார்புநிக்கவல் படைய நீக்குந் தவத்தார்பாற் சிவ'ர் வந்து சாருஞ் சுவே." எ-ம், மற்றும் வருவனவற்றுற் காண்க. (கஅ)

ஆரம்பையுள் ளுறுதண் டெடுத்தலி னொருவ னநுபவ மாஞ்சிவ முணர்த, னிரம்புமெய் யுணர்வத் தண்டின்மீ தொன்றி நின்றதா ரனைத்துநீக் குதல்போல், விரும்பிரு வகைப்பற் றையுந்துறந் திருளை விட்டிடல் வீடிவற்றையே யன்றி, வரும்பர ஞானம் வீடும்வே றறியேம் வார்த்தை மாத்திரத்தியாம் பெறவே. (38)

ப - ரை. ஆரம்பை - வாழையினது (மட்டைகட்) கெல்லாம், உள் - உள்ளே, உறு - (சேஷமாய்) இருக்கின்ற, தண்டு - தண்டினை, எடுத்தலின் - எடுத்தல் போல், ஒருவன் - ஒருவன், அநுபவமாம் - அநுபவமாய், (மாயா காரிய காரணங்கட் கெல்லாம் சேஷமாய் உள்ளீடாய் விளக்கா நின்ற), சிவம் - சிவத்தினை, உணர்தல் - அறிதலை, நிரம்பு - (எங்கும்) பரிபூரண மாகிய, மெய் உணர்வு - பர ஞானம், அ - அந்த, தண்டின் - (வாழைத்) தண்டின், மீது - மேலே, ஒன்றி - பொருந்தி, நின்ற - நின்ற, தார் - மட்டைகள், அனைத்தும் - அனைத்தினையும், நீக்குதல் - (ஒவ் வொன்றாக) நீக்குதல், போல் - போல, விரும்பு - (தம்மால்) விரும்பப்பட்ட, இரு வகை - (உட்பற்றுப் புறப்பற்றாகிய) இரு வகை, பற்றையும் - பற்றினையும், துறந்து - துறந்து, இருளை - (அஞ்ஞான) இருளை, விட்டிடல் - கெடுத்தலை, வீடு - மோக்ஷம், இவற்றை - இந்தப் பர ஞானத்தையும் மோக்ஷத்தையும், அன்றி - அன்றி, வார்த்தை - வார்த்தை, மாத்திரத்து - மாத்திரத்தால், பெற - பெற, வரும் - வரும், பர - பர, ஞானம் - ஞானத்தினையும், வீடும் - மோக்ஷத் தினையும், வேறு - வேறே, யாம் - நாம், அறியேம் - அறிகிலேம், எ - று. வே - ஏ - அசை.

பொ - ரை. எ - து. வாழையினது மட்டைகட் கெல்லாம் உள்ளே சேஷமா யிருக்கின்ற தண்டினை எடுத்தல் போல், ஒருவன் அநுபவமாய் மாயா காரிய காரணங்கட் கெல்லாம் சேஷமாய்

உள்ளீடாய் விளங்காநின்ற சிவத்தினை அறிதலே எங்கும் பரிபூரண மாகிய பர ஞானம்; அந்த வாழைத் தண்டின் மேலே பொருந்திநின்ற மட்டைகள் அனைத்தினையும் ஒவ்வொன்றாக நீக்குதல் போலத் தம்மால் விரும்பப்பட்ட உட் பற்றுப் புறப் பற்றாகிய இரு வகைப் பற்றினையும் துறந்து அஞ்ஞான விருளைக் கெடுத்தலே மோக்ஷம். இந்தப் பர ஞானத்தையும், மோக்ஷத்தையும் அன்றி, வார்த்தை மாத்திரத்தால் பெற வரும் பர ஞானத்தினையும், மோக்ஷத்தினையும் வேறே நாம் அறிகிலேம், எ - று.

'வார்த்தை மாத்திரத்தால் பெற வரும் ஞானம் மோக்ஷம்' என்றது, சர்வத்தையும் பிரமமென்று அறியா திருந்ததே அஞ்ஞான மென்றும், சர்வத்தையும் பிரமமென்று அறிந்ததே ஞான மென்றும், இங்ஙன மறிந்த போதே அஞ்ஞானங் கெடுமென்றும் கூறிக் கொண் டிருத்தலை. (௩௮)

இருவகைச் சார்பா மொருபுறப் பற்று மிடையதாங் கடையுடற் பற்றும், விரிகர ணங்க ளாகுமுட் பற்று மெனத்திரி விதம்விளங் கிடுமித், திரிவிதத் தினையுங் காத்திரங் கரணஞ் சேர்த்தியொன் றுக்கொடுட் பற்றும், வருபுறப் பற்று மெனவிரண் டாக மதிப்பரால் வணக்குற வையுமே. (39)

ப - ரை. இரு வகை - (உயிர்ச் சார்பு பொருட் சார்பு என்னும்) இரு வகை, சார்பு - சார்பு, ஆம் - ஆகிய, ஒரு - ஒரு, புறப் பற்றும் - புறப் பற்று (எனவும்), இடையது - இடைப் பற்று, ஆம் - ஆகிய, கடை - கடை யாகிய, உடல் பற்றும் - உடற் பற்று (எனவும்), விரி - விரிந்த, கரணங்கள் - கரணங்கள், ஆகும் - ஆகிய, உள் பற்றும் - உட் பற்று, என - எனவும், திரி விதம் - (இங்ஙனம் பற்றுக்கள்) மூன்று விதமாய், விளங்கிடும் - விளங்கா

சற்றும், இ திரி விதத்தினையும் - இம் மூ வகைப் ப
காத்திரம் - காயத்து (உடனே), காரணம் - காரணத்தை, சேர்த்தி - சேர்த்து, ஒன்ரு - ஒன்ருக, கொடு - கொண்டு, உள் பற்றும் - உட் பற்று (எனவும்), வரு - - ,, - , புறப் பற்றும் - (இங்ஙனம்) புறப் பற்று, என - எனவும், அ - அந்த, வணம் - முறைமையே, துறவையும் - துறவினையும், இரண்டு ஆக - (உட் டுறவு எனவும், புறத் துறவு எனவும்) இரண்டாக, மதிப்பர் - கருதிச் சொல்வர் பெரியோர், எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - து. உயிர்ச் சார்பு பொருட் சார்பு என்னும் இரு வகைச் சார் பாகிய ஒரு புறப் பற் றெனவும், இடைப் பற் ருகிய கடை யாகிய உடற் பற் றெனவும், விரித்த காரணங்களாகிய உட் பற் றெனவும், இங்ஙனம் பற்றுக்கள் மூன்று விதமாய் விளங்காநிற்கும். இம் மூவகைப் பற்றினையும் காயத்துடனே காரணத்தைச் சேர்த்து ஒன்ருகக் கொண்டு உட் பற் (
இங்ஙனம் புறப் பற் றெனவும், அந்த முறைமையே துறவினையும் உட் டுற வெனவும், புறத் துற வெனவும் இரண் டாகக் கருதிச் சொல்வர் பெரியோர், எ - று.

காயத்தோடு காரணம் ஒற்றுமையாகலின், 'காத்திரங் காரணஞ் சேர்த்தி' என்ருர். 'இரண்டாக மதிப்பர்' என்றதை இருதிலையுங் கூட்டுக.

பற்றுக்கள் 'திரிவிதமாய் விளக்கும்' என்றதற்கு உதாரணம்: சமயாசாரம். (32) "புத்திரர் மனையா ளாதிப் புறச்சுற்றப் பற்று நீக்கி, பித்திரன் மலவு டம்பா மிடைச்சுற்றப் பற்றும் விட்டே, யொத்துயிர் விடாத பாசக் காரவுட் சுற்று மோய்த்துத், தத்துவ மலி ருத்த நவத்தவர் சரிதை யையா," எ - ம். மற்றும் வருவன வற்ருற்காண்க.

பொ - ரை. எ - று. உட்பற்றுப் புறப்பற்றாகிய வகைப் பற்றுக்களும் இல்லாத ஒரு புருஷனை ஞானி யென்று சொல்லப்படுவானும், புறப் பற்றாயினும் நீங்குதல் இல்லாதாரும் எந்த முறைமையால் அந்த ஞானி யென்னும் பெயருக்கு உரிய ராவார். ஆனால், புறப் பற்றிருக்க அகப் பற்றை யொழித்தோர் ஞானிகள் அல்லரோ வென்னின், ஒரு வேராயினும் இல்லாத கொடியும் இலை மலர் காய்களைத் தருமானால், அகப் பற்றில்லாத தவத்தோர் புறப் பற்றினையும் விட்டு நீங்கார். ஆனால், புறப் பற்றிருக்க அகப் பற்றொழித்தோர் இல்லையோ வென்னில், புறப் பற்றிருக்க, அகப் பற்றொழிதலை யொருவர் அடைந்தா ராயினும், வேரினை அன்று அறுக்கப்பட்ட மலர்க் கொடி சிறிது போது வாடா திருக்கு முறைமை போல், அகப் பற்றொழித்தோர்க்கும் புறப் பற்றுச் சில நாள் இருக்கும், எ - று.

போல், காரண மாகிய அகப் பற்றொழித்தால், அதனது காரிய மாகிய புறப் பற்று இராதென்று குறிப்பாற் கூறி, 'வேரொன்று மில் கொடியுந் தருமிலை மலர்கா யெனி னகப்பற்றி லவர் புறப் பற்றையுந் தணவார்' என்று அவரைப் பரிகாசம் பண்ணினார். வேரன்றீர் மலர்க்கொடி அறுத்த தருணத்திற் பச்சென்று சிறிது போது வாடாதது போற்றோன்றிப், பின்பு உலர்ந்து போகின்றது போல், அகப் பற்றொழித்த தருணத்திற் புறப் பற்றுச் சில நாள் இருத்தல் போலத் தோன்றி நீங்கு மென்ப தறிக. அகப் பற்றொழித்தோர்க்குப் புறப் பற்றின் மேல் பிரவிருத்தி இல்லாமை யால், அவர்க்கு அஃதின் றெனக் கொள்க. [illegible]

வேரறக் கொடிவா டுதலினுட் பற்றை விடுக்கின்மற்
றையபற்று மேவே, சோருத லியல்பா மதனையே முன்னர்த்
தொலைக்கவேண் டுவதெனிற் கடுமுட், சாருமோர் கொடி
யின் இலையனைத் தையுமுன் றறித்தொழித் தலதத
னிடையார், ஓர்தனி வேர்கொள் ளரிதரி தகப்பற்
றொழித்தலும் புறப்பற் றுறவே. (41)

ப - ரை. வேர் - (காரண மாகிய) வேர், அற - அற, கொடி - (அதன் காரிய மாகிய) கொடி, வாடுதலின் - உலர்ந்து போதல் போல், உள் - காரண மாகிய அக, பற்றை - பற்றினை, விடுக்கின் - (முன்பு) ஒழித்தால், மற்றைய பற்றும் - அதனது காரிய மாகிய (புறப்) பற்றும், மேவே - உடனே, சோருதல் - நீங்குதல், இயல்பாம் - சுபாவ மாகலின், அதனையே - அந்த உட் பற்றினையே, முன்னர் - முன்பு, தொலைக்க - ஒழிக்க, வேண்டுவது - வேண்டும், எனில் - என்பையானால், கடும் - கடிய, முள் - முட்கள், சாரும் - பொருந்திய, ஓர் - ஒரு, கொடியின் - கொடியினது, இலை - இலைகள், அனைத்தையும் - அனைத்தையும், முன் - முன்னர், தறித்து - வெட்டி, ஒழித்து - நீக்கினும், அலது - அன்றி, அதன் - அதன், இடை - நடுவே, ஆர் - பொருந்திய, ஓர் - ஒப்பற்ற, தனி - முதல், வேர் - வேரினை, கொள் - (பிடுங்கிக்) கொள்ளுதல், அரிது - அரிது (அது போல் முன்பு புறப் பற்றை ஒழித்து அகப் பற்றை ஒழிப்ப தன்றி), புறப் பற்று - புறப் பற்று, உற - இருக்க, அகப் பற்று - அகப் பற்றினை (முன்பு), ஒழித்தலும் - ஒழித்தலும், அரிது - அரிது, எ - று.

பொ - ரை. எ - று. காரண மாகிய வேர் அற அதன் காரிய மாகிய கொடி உலர்ந்து போதல் போல், காரண மாகிய அகப் பற்றினை முன் ஒழித்தால், அதனது காரிய மாகிய புறப் பற்றும் உடனே நீங்குதல் சுபாவ மாகலின், அந்த உட் பற்றினையே

பல் பலரும் - பலரும், வீடு - வீட்டினை, அடையும் - அடையும், நெறி - மார்க்கம், அது அன்மையின் - அஃதன்றாகலின், நூலவு - நூலினது (இலக்கணங்களை யெல்லாம்), அளந்த - (அறிந்து) அளவிட்ட, தெள்ளியோர் - தெளிந்த அறிவினை யுடைய திருவள்ளுவ நாயனார் (புறப் பற் றொழித்தே அகப் பற் றொழிக்க வேண்டு மென்று), புறப் பற்று - புறப் பற்று, ஒழித்தலே - ஒழித்தலை, முதற்கண் - (அகப் பற்று ஒழித்தற்கு) முதற்கண், செப்பினர் - கூறினர், எவர்க்கும் - யாவர்க்கும், ஒப்பு - சம்மதம், உற - ஆக, எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. முன் விளைந்த சில கொடியினது வேரினை, முன்னர்க் கொடி தறித் தொழியாது பிடுங்கிக் கொள்ளுதல் போல், சனக ராஜா முதலிய ஒரோருவர், ஒப்பற்ற தமது உள்ளத்தின்கட் காமம் வெகுளி மயக்க மென்னும் முக் குற்றங்களும் பொருந்தாத இயல்பினரால், புறப் பற் றிருக்க அகப் பற்றினை முன்னர் ஒழித்தா ராயினும், என்னைப் போலும் முக் குற்றங்களையு முடைய மத்தியர் பலரும் வீட்டினை அடையு மார்க்கம் அஃதன் றாகலின், நூலினது இலக்கணங்களை யெல்லாம் அறிந்து அளவிட்ட தெளிந்த அறிவினை யுடைய திருவள்ளுவ நாயனார், புறப் பற் றொழித்தே அகப் பற் றொழிக்க வேண்டு மென்று, புறப் பற் றொழித்தலை அகப் பற் றொழித்தற்கு முதற்கட் கூறினர், யாவருக்கும் சம்மத மாக, எ - று.

'உள்ள மாசறுகை' என்றதனால், நின்மல சித்த ரென்றும், 'கள்ள நெஞ்சினர்' என்ற தன்மையால், மலின சித்த ரென்றும் அறிந்து கொள்க. நின்மல சித்தர்கள் ஏகதேசிகளாய் எவ்வகைப் பட்ட பற்றுக்க ளிருந்தாலும், அவற்றின்கண் அவா வின்றித் தெய்வ கதியாய் வீ டடைதலினாலும், மலின சித்தர்கள் அநேக ரிருப்பதாலும், விட்ட பற்றுக்களின் மேலும் ஒரோர் காலே அவாவு

தலானும், அவர் வீ டடைபு மார்க்கம் யாவர்க்கும் மார்க்க மன்றென்றார். அறம் பொரு ளின்பம் வீ டென்னும் நான்கினையும் தெளிந்தவ ராதலின், 'தெள்ளியோர்' என்றார். புறப் பற் றிருக்க அகப் பற் றொழிந்தோர்க்கும் சம்மத மாதலின், 'வைர்க்த மொப்புர' என்றார். மற்று என்ப தசை நிலை.

'உள்ள மாசனுகா வியல்பினன்' என்றதற்கும், 'கள்ளநெஞ்சினர்' என்றதற்கும் உதாரணம்: வாசிட்டம். (33) "வெம்புதல் போய்த தன்மையன்றி அன்மாதுக் கிவ்வுலக வியாபாரங்கள், செம்புகர்வே யுத்தினுக்கான் குளப்படிபோற் றென்றுமா நீக செஞ்சக், கம்புவியுர் றொழில்செறிந்த யாயினுநீச் திரிடவரிதா மாவின் பாதப், பைம்புனலுங் கிழக்கொதுருக் கெல்லைகளை காணுத பரவை யன்றே." என வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (சஉ)

விடத்தகு மகப்பற் றினைமுனம் புறப்பற் றொழிப்ப
தெற் றினுக்கென விளம்பல், படிற்றொழுக் கினர்சம்
மதமும்வா ரவரும் பயிலில்வாழ்க் கையும்விடுக் குதலென்,
றெடுத்துமைக் கறிவா சாரமோ டியசொற் கிழுக்குமா
குதலின்மா சியல்பாத், துடைத்தசிந் தையர்க்கு நிந்தையி
லொழுக்கார் சொல்வர்முன் புறல்புறத் துறவே. (43)

ப-ரை. முனம் - முன்னர், அகப் பற்றினை - அகப் பற்றினை, விட - ஒழிக்க, தகும் - தகும், புறப் பற்று - புறப் பற்றினை, ஒழிப்பது - ஒழிப்பது, எற்றினுக்கு - யாதுக்கு, என - என்று, விளம்பல் - சொல்லுதல், படிற்று - கடா, ஒழுக்கினர் - ஒழுக்கத்தார்க்கு, சம்மதமும் - சம்மதமும், வாரவரும் - வாரவு ராயினும், பயில் - (தாம் முன்) பழகிய, இல் - இல், வாழ்க்கையும் - வாழ்க்கையையும், விடுக்குதல் - விடுத்தல். செய்யு [illegible]

ஒன்றிய பாச விருளோக் கிடுதற் குபாயமைம் புலனெ
டுக் கிறத, லொன்றல திலையென் றதுசெய்வோ னவை
வேண் டனைத்துமுன் விடாதுவைத் துறுத, லென்று
மெவ் விடத்து மெனைமுத லுயிர்க ளெவற்றையுங் கொலை
செயேன் வெருட்டேட, னென்றுசொல் விரதி யொருவனு
டொறுங்கை யிடையிலோர் படைகொளு மியல்பே. (44)

ப - ரை. ஒன்றிய - (உயிரோடு) பொருந்திய, பாச - அஞ்
ஞான, இருள் - இருளை, நூக்கிடுதற்கு - போக்குதற்கு, உபாயம் -
உபாயம், ஐ - பஞ்ச, புலன் - இந்திரியங்களை, ஒடுக்கிடுதல் -
நிக்கிரகம் பண்ணுதல், ஒன்று - ஒன்றுமே அலது - அன்றி,
இலை - (வேறே உபாயம்) இல்லை, என்று - என்று, அது - அவ்
வைந்திரியும், செய்வோன் - (நிக்கிரகம்) பண்ணுவோன், அவை -
அந்த (ப் பஞ்சேந்திரியங்களால்), வேண்டு - விரும்பப்பட்ட,
அனைத்தும் - (பொருள்கள்) அனைத்தினையும், முன் - முன்,
விடாது - விட்டு நீங்காது, வைத்து (க் கொண்டு), உறுதல் -
இருத்தல், என்றும் - எக் காலத்தும், எவ் விடத்தும் - எவ் விடத்
தும், எனை - என்னை, முதல் - முத லாகிய, உயிர்கள் - உயிர்கள்,
எவற்றையும் - எவற்றினையும், கொலை - கொல்லுதல், செயேன் -
செய்யேன், வெருட்டேன் - பயப்படச் செய்யேன், என்று -
என்று சொல் - சொல்லாநின்ற, விரதி - (கொல்லா) விரதி,
ஒருவன் - ஒருவன், எல் தொறும் - எக் காலமும், கையிடையின் -
கையின்கண் (இடை விடாது), ஓர் - ஒப் பற்ற, படை - ஆயா
யுதம், கொளும் - (பிடித்துக்) கொள்ளும், இயல்பு - முறைமை
(யாம்), எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. உயிரோடு பொருந்திய அஞ்ஞான
விருளைப் போக்குதற்கு உபாயம் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம்
பண்ணுத லொன்றுமே அன்றி, வேறே உபாய மில்லை யென்று,

ப - ரை. சாதக - (ஞான) சாதக, தசைக்கண் - தசையின் கண், விடயமே - விடயங்களே, தடை - (அதற்கு) தடை, ஆம் - ஆகும் [ஆகலின், அவற்றினை வைத்துக் கொண்டு சாதகம் பண்ணக் கூடாது, ஆனால், அவ் விடயங்களைச் சாதக தசைக்கண் அநுபவியாது], சாத்தியமான - சாத்தியமான, பின் - பின் பேறும், புசித்தற்கு ஆதல் - அநுபவித்தற்கு, வைத்திடின் - வைத்துக் கொள்வையானால், (அச் சாத்திய தசைக்கண்ணே உதயமான) அ - அந்த, பிரம ஆநந்தத்து - பிரமாநந்தத்திலும், விடய ஆநந்தம் - (இந்த) விடயாநந்தம், அதிகமோ - அதிகமாக வேண்டும் (ஆதலின், இந்த விடயாநந்தமே போதும், அந்தப் பிரமாநந்தத்தை அடைய ஞான சாதகம் பண்ண வேண்டுவதே யில்லை, ஆனால் சாதகம் பண்ணிக் கொண்டு வருமிடத்துச் சாத்தியம் கைகூடி), கோது - குற்றம், இல் - அற்ற, வீடு - வீடு, இன்பம் - இன்பம், பெறுக அலர் விடினும் - வந்து லபியாத காலத்தாயினும், கூடுதற்கு - பொருந்(தி அநுபவித்)தற்கு (அவைகளை வைத்துக் கொள்வேன்), எனில் - என்பையானால், கரி - யானையினை (இரையாகத் தேடிச் சென்ற), தீது - குற்றம், இல் - இல்லாத, ஒர் - ஒப்பற்ற, சிங்கம் - சிங்கம், பிழைக்கில் - (அந்த யானை) தப்பிப் போயிற்றென்றால், அதனையே - அதனையே, அன்றி - (தேடுதல்) அன்றி, தேரை - (அற்பமாய் உள்ள) தேரையினது, ஊன் - மாமிசத்தை, தின - தின்ன, தேடுமோ - தேடுமோ, எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. ஞான சாதக தசையின்கண் விடயங்களே அதற்குத் தடையாகு மாகலின், அவற்றினை வைத்துக் கொண்டு சாதகம் பண்ணக் கூடாது. ஆனால், அவ் விடயங்களைச் சாதக தசைக்கண் அநுபவியாது சாத்தியமான பின் பேறும் அநுபவித்தற்கு வைத்துக் கொள்வையானால், அச் சாத்திய தசைக் கண்ணே உதயமான அந்தப் பிரமாநந்தத்திலும் இந்த விடயா

மூன் றினை' என்றதற்கு உதாரணம்: குறக் திரட்டு. (37) "பாய்ந்துமா வேழ மொற்றிப் பறக்குமத் தரகன் பாவி, தேய்க் தழி வுறினுந் தேரை யிரையெனச் செல்லா தாற்போ, லாய்ந்துணர் முத்தியின்ப மருந்திட வுற்ற கீரர், சாக்தயர் வரினு மொன்றித் துணர்ச்செழு தாகி விட்டார்." எ-ம், மற்றும் வருவனவற்றுற் காண்க. (சசு)

படையெடுத் தமர்க்கட் சாருமோர் வீரன் பகை ஞரைச் சயங்கொளா விடினும், விடையெனப் பொருதாங் கிறத்தலே யன்றி வெந்கிட வுன்னிடா னதுபோற், கடையென விடய மிகழ்ந்துபே ரின்பங் கருதினோன் பெறு கலா விடினு, மிடையரு தனைதா னெவதலான் மறந்து மென்னுமோ மண்ணின்வாழ்க் கையையே. (46)

ப-ரை. படை - ஆயுதம், எடுத்து - எடுத்து (க் கொண்டு), அமர்க்கண் - யுத்த களத்திலே, சாரும் - செல்லாநின்ற, ஓர் - ஒப்பற்ற, வீரன் - வீர னொருவன், பகைஞரை - சத்துருக்களை, சயம் - செயம், கொளா விடினும் - கொள்ளாத விடத்தும், விடை - இடபம், என - போல், பொருது - (அச் சத்துருக்களோடு) யுத்தம் பண்ணி, ஆங்கு - அந்த (இரண) களத்திலே, இறத்தலே - இறந்து போதலே, அன்றி - அன்றி, வெந் - (பயந்து) முதுகு, இட - கொடுக்க, உன்னிடான் - நினையான், அது போல் - அது போல், கடை - இழிவு, என - என்று (அறிந்து), விடயம் - (அற்பமாயுள்ள) விடயானந்தத்தை, இகழ்ந்து - இகழ்ந்து (கைவிட்டு), பேர் இன்பம் - பேரானந்தத்தை, கருதினோன் - (அடையக்) கருதி (ஞான சாதகந் தொடங்கி)னோன், பெறுக லாவிடினும் - (சாந்தி யம் கைகூடி அவ் வின்பத்தைப்) பெறாது இறந்தாலும் ஆயினும், இடை அருது - (ஞான சாதனம்) இடைவிடாது; [illegible]

இன்பத்தை (எப் பொழுது அடைவே னென்று), காங்ஷவதே - கருது வதே, அலால் - அன்றி, மறந்தும் - மறந் தாயினும், மனையின் வாழ்க்கையை - (தான் முன்பு இகழ்ந்து கைவிட்ட) இல் வாழ்க் கையை, என்றுபோ - (மீண்டும்) நினைப்பானோ, எ-று. ஏ-அசை,

பொ-ரை. எ-து. ஆயுத மெடுத்துக் கொண்டு யுத்த களத்திலே செல்லுகின்ற ஒப் பற்ற வீர னானவன், சத்துருக்களைச் சயங் கொள்ளாத விடத்தும், இடம்பம் போல் அச் சத்துருக்க ளோடு யுத்தம் பண்ணி அந்த ரண களத்திலே இறந்து போதலே யன்றிப், பயந்து முதுகு கொடுக்க நினையான், அது போல் இமு வென்று அறிந்து அற்பமா யுள்ள விடயானந்தத்தை இகழ்ந்து கைவிட்டுப் பே ரானந்தத்தை அடையக் கருதி ஞான சாதகத் தொடங்கினோன், சாத்தியம் கைகூடி அவ் வின்பத்தைப் பெறு திருந்தா னாயினும், ஈன மாயினும் இடைவிடாது அந்த இன் பத்தை எப் பொழுது அடைவே னென்று கருதுவதே யன்றி, மறந் தாயினும் தான் முன்பு இகழ்ந்து கைவிட்ட இல் வாழ்க்கை யை மீண்டும் நினைப்பானோ, எ-று.

சுத்த வீரன் சத்துருக்களைச் சயங் கொள்ளாத விடத்தும் அவர்களோடு யுத்தம் பண்ணி இறந்து போதலே யன்றி, முதுகு கொடுத்தற்கு நினையான், அது போல் சுத்த விரத்தன் ஞான சாதகம் பண்ணுமிடத்தும் அஞ்ஞான நாசம் பண்ணிப் பே ரின் பத்தை அடையா திருந்தா னாயினும், அந்தச் சுத்த வாதனையோடு நின்று இறந்து போதலே யன்றி, விடயங்களை இச்சித்து இல் வாழ்க்கையில் திரும்ப னென்பதும், யுத்த களத்திலே வெட்டுண்டு இறந்தோனுக்கு மறுமைக்கண் வீர சொர்க்க வின்பம் வருவது போல், சுத்த வாதனையோடு இறந்தோனுக்கும் மறுமைச் சகத் திலே வீட் டின்பம் வரு மென்பதும் காண்க. (சச)

இந்திர சாலத் தொருநகர் காண்போ ரெனத்தநு முதற்பிர பஞ்ச, நந்நிலுங் கெடினும் பூரியா வாடா நன்மநச் சநக ராதியரு, மந்திரி முதலோர் மீதுபூ பாரம் வைத்தொரோ காந்தத்துள் வதியாத், தந்தொழி லொருக் கிச் சமாதியுற் றன்றோ தவிர்ந்தனர் காணவா தனையே (47)

ப - ரை. இந்திர - இந்திர, சாலத்து - (இந்திரசால வித்தையி) லே, (தேர் திரு விழா முதலிய மங்கலமும், அக்கினிபட்டு வேவுதல் முதலிய அமங்கலமு மாய் விளங்குகின்ற), ஒரு - ஒரு, நகர் - பட்டணத்தினைப், காண்போர் - (பொய் யென்று அறிந்து விநோத மாகக்) காண்போர், என - போல், தநு - தேகம், முதல் - ஆதி, பிரபஞ்சம் - பிரபஞ்சம் (எல்லாம் மாயா காரிய மாகிய பொய் யென்று அறிந்து அவைகள்), நந்நிலும் - (ஆக்கமாய்) விளங்கு மிடத்தும், கெடினும் - (அவற்றிற்கு) நாசம் வந்த விடத்தும், பூரியா வாடா - பூரிப்பு வாட்டம் இல்லாத, நன் - நின்மல, மந - சித்தத்தினை யுடைய, சநகன் - சநக ராசா, ஆதியரும் - முதலோர் களும், மந்திரி - மந்திரி, முதலோர் மீது - முத லாகிய பேர்க ளிடத்து, பூ - இராச்சிய, பாரம் - பாரத்தை (எல்லாம்), வைத்து - ஒப்பித்து, ஒரு - ஓர், ஏகாந்தத்துள் - ஏகாந்தத் (தானத்) தில், வதியா - இருந்து (கொண்டு), தம் - தமது, தொழில் - (இராச கீகத்) தொழில்களை (யெல்லாம்), ஒருக்கி - ஒழித்து, சமாதி - (ஞான) சமாதி, உற்று - அடைந்து, அன்றோ - அல்லவோ, காண - (அந்தக்) காண, வாதனை - வாதனையை, தவிர்ந்தனர் - ஒழித் தார்கள், எ - று.

பொ - ரை. எ - று. இந்திர சால வித்தையிலே தேர் திரு விழா முதலிய மங்கலமும், அக்கினிபட்டு வேவுதல் முதலிய அமங்கலமு மாய் விளங்குகின்ற ஒரு பட்டணத்தினைப் பொய்

ப - ரை. சொற்றிடின் - சொல்லு மிடத்து, மயக்கம் - (பிண்ட ஞானத்தை மறைக்கும்) மயக்க இருள், அற்று - இன்றி, உதித்த - உதயம், உள - ஆகிய, அ - அந்த, சுகரும் - சுகரும், நண் - ஒன்னிய, தாதையை - பிதாவினை, துறவா - துறந்து, இரும் - பெருமை, உற்ற - பொருந்திய, சமாதி - (ஞான) சமாதியை, உற்று - அடைந்து, அகப் பற்றும் - (மற்றை) அகப் பற்றினையும், ஒருவி - நீங்கி, வீடு - வீட்டினை, அடைந்தனர் - அடைந்தார், சநகர் - சநகர், முன் - முதலிய, தவ முனிவர் - தவ முனிவர், நால்வரும் - நால்வரும், ஒரு - ஒப்பற்ற, நால் - நான்கு, முக - முகங்களை யுடைய, பிதா விடத்தும் - (தமது) பிதா விடத்தும், அவன் - அவனது, வளத்து - செல்வத்தினிடத்தும், ஓர் - ஒரு, பற்றும் - பற்றுயினும், அற்று - இன்றி, (த் துறந்து), உயர் - உயர்ந்த, சமாதி - (ஞான) சமாதி, பணி - கூடி, அகப் பற்றையும் - அகப் பற்றினையும், ஒழித்து - ஒழித்து, எணிய - (தாம்) கருதிய, வீடு - வீட்டினையும், அடைந்தார் - அடைந்தார்கள், எ - று.

பொ - ரை. எ - து. சொல்லு மிடத்துப் பிண்ட ஞானத்தை மறைக்கு மயக்க விருளின்றி உதய மாகிய அந்தச் சுகரும், ஒன்னிய பிதாவினைத் துறந்து, பெருமை பொருந்திய ஞான சமாதியை அடைந்து, மற்றை அகப் பற்றினையும் நீங்கி வீட்டினை அடைந்தார். சநகர் முதலிய தவ முனிவர் நால்வரும் ஒப்பற்ற நான்கு முகங்களை யுடைய தமது பிதாவிடத்தும், அவனது செல்வத்தினிடத்தும், ஒரு பற்றுயினு மின்றித் துறந்து உயர்ந்த ஞான சமாதி கூடி, அகப் பற்றினையும் ஒழித்துத் தாம் கருதிய வீட்டினையும் அடைந்தார்கள், எ - று.

சுகரும், சநகர் முதலிய நால்வரும் வேதாகம விசேஷங்களையும், ஞானத்தினையும், அறிவிக்கும் வல்லமை யுடைய உத்தம பிதாக்களை -

அதனை அறியக் கூடுமோ வென்று மகா தேவி முதலா யுள்ள னைது கூட்டங்களை யெல்லாம் நீக்கி, உயர்ந்த கல்லால மரத்தி னிழற்கண் எழுந் தருளி ஞான சமாதியை அடைந்து, மகா தேவனே அறிவித்தா னென்றால், பின்னரும் வேறே சநக ராசா முதலிய பேர்களைத் திருட்டாந்த மாக எடுத்துக் கூறுதல் நமது மிகுந்த அறியாமை யல்லவோ, எ - று.

மெய்ஞ் ஞான முத்திரை - மகா மௌனம். மகா தேவரினும் அறிவிப்பா ரின்மையின், 'பினும் வே றுரைத லம்பிகு மடம்' என்றார்.

'மனை முதற் சகலமும் விடுத்து' என்றதற்கு உதாரணம்: திரு மந்திரம். (39) "விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து, புரந்தகல் லானிழற் புண்ணியன் சொன்ன, பரந்தன்னை யோராப் பழமொழி யான, குரந்தன்மை யாகவொ குங்குகின்றாரே." எ - ம், வரும். மற்றும் வருவனவற்றாற் காண்க. (சக)

எடுத்தனை குடும்பச் சுமையொடொன் றொருவ
னெங்ஙன ஞானவா சானை, யடுத்தவ னவனொ றடுத்தருள்
சாக்கு மளவுநின் றனமகிழ்ந் தன்னேன், கொடுத்தகாள்
வாங்கிக் கொளும்பா மார்த்தங் கூடினுங் காலமா திகளாற்,
றடுத்துரை தொழிலை விடுத்தலாற் சமாதி சார்ந்தவ
னனையவும் படுமே. (50)

ப - ரை. ஈண்டு - இவ் விடத்து, ஒருவன் - ஒருவன், எடுத்து - (தான்) சுமந்து, உன - உன்ன, குடும்ப சுமையொடு - குடும்ப பாரத் துடனே, எங்ஙனம் - எப்படி, ஞான - ஞான, ஆசானை - ஆசாரியனை, அடுத்து - அடைந்து, அருள் - (அவனுக்குப் பூரண) கிருபை, சாக்கும் - வரும், அளவும் - அளவும், அவன் - அவனது, வைத்

கூறினர். கால தேச வர்த்தமான மென்பது, அற்ப காலம், இராச கலகங்களினது சரித்திரம். அவற்றால், அவ ரிருக்குமிடத்தில் இவன் சென்றானாயினும், இவ னிருக்குமிடத்தில் அவர் வந்தாராயினும், தெய்வ கதி யாகக் கூடுதலிற், 'கூடினும்' என்றார். குடும்பிக்கு வாக்குக் காயங்க ளடங்காமையின், மனோ லயம் பண்ணக் கூடாது, மனோ லயம் இன்மையால், அஞ்ஞாநம் நிவிருத்தி ஆகாது; அஞ்ஞாந நிவிருத்தி இன்மையால், ஞானோதய மாகாது. ஆகலின், 'தடுத்துணை தொழிலை விடுத்தவற் சமாதி சார்ந்தவரவையும் பழுதே' என்றார். இதனாற் குடும்பிக்கு ஞானாசாரியனை அடைந்து அநுக்கிரகம் பெற்ற காலத்தும் சமாதி கூடிப் பாவனா மூலமாக் கூடா தென்பதூஉம் கண்டு கொள்க. (௫௦)

தனித்திருந் தொருதம் மனத்தையைம் பொறிவாய்த்
தடுத்தகப் படுத்திஃ தெத்தை, நினைத்தெழா நின்ற
தென்றுநோக் குவரே நீக்குவர் வாக்கொடு தொழிலைப்,
பிணைத்தடை யாம்போக் குவரில்வாழ்க் கையையும் பேச்சை
நா டொறும்பழ குவர், தனித்திருந் தேனும் விடார்
பிறர் காண்ப தன்மையா னகப்பற்றே விடுப்பார். (51)

ப - ரை. தனித்து - ஏகாந்த ஸ்தானத்தை, இருந்து - (பொருந்தி) யிருந்து, ஒரு - ஒப் பற்ற, தம் - தமது, மனத்தை - மனத்தினை, ஐ - பஞ்ச, பொறி - பொறி, வாய் - வழியே, தடுத்து - (சகமுகமாய்ச்) செல்லாது (உள்) வாங்கி, அகப்படுத்து - அக (முக) ப்படுத்தி, இஃது - இந்த மனம், எத்தை - என்னத்தை, நினைத்து - நினைத்து (க் கொண்டு), எழாநின்றது - எழுகின்றது, என்று - என்று, நோக்குவரே - (அறிவினால்) பார்க்குவரே, வாக்கொடு - (வாக்குக் காயங்களினது தொழில்களை நினைத்துக் கொண்டு எழுகின்ற தென்று அறிந்து அவ்) [illegible]

(தொழில்களையும்), தொழிலை - (காயத்தாற் செய்யுந்) தொழில்களையும், நீக்குவர் - (விட்டு) நீக்குவார், தலை - (அவ் வாக்குக் காயங்கள் நிவிருத்தியாகலின் இல் வாழ்க்கையைப் பாதுகாத்தற்குத்) தலை, ஆம் - ஆகலின், பினை - பின்னர், இல் வாழ்க்கையையும் - (அந்த) இல் வாழ்க்கையையும், போக்குவர் - (விட்டு) நீக்குவார், பேச்சை - (வாசக ஞான மாகிய) வார்த்தைகளோடு, என்றொறும் - எக் காலமும், பழகுநர் - பழக்க முடையார், ஈது - (விட வேண்டு மென்று கூறிய) ஈது, அனைத்தின் - அனைத்தின் (உள்ளும்), ஒன்றேனும் - ஒன்றாயினும், விடார் - விடார், பிறர் காண்ப தன்மையான் - பிறர் காண்ப தன்மையால், அகப் பற்றே - அகப் பற்றொன்றையுமே, விடுப்பர் - ஒழிப்பார், எ - று.

பொ - ரை, எ - று. ஏகாந்த ஸ்தானத்தைப் பொருந்தி யிருந்து ஒப் பற்ற தமது மனத்தினைப் பஞ்சப் பொறி வழியே சக முக மாய்ச் செல்லாது, உள் வாங்கி அக முகப் படுத்தி, இந்த மனம் என்னத்தை நினைத்துக் கொண்டு எழுகின்ற தென்று அறிவினாற் பார்க்குமவரே, வாக்குக் காயங்களது தொழில்களை நினைத்துக் கொண்டு எழுகின்ற தென்று அறிந்து, அவ் வாக்காற் சொல்லுந் தொழில்களையும், காயத்தாற் செய்யுந் தொழில்களையும் விட்டு நீக்குவார். அவ் வாக்குக் காயங்கள் நிவிருத்தி யாகலின், இல் வாழ்க் கையைப் பாதுகாத்தற்குத் தலை வருமாகலிற், பின்னர் அந்த இல் வாழ்க்கையையும் விட்டு நீக்குவார், வாசக ஞான மாகிய வார்த்தை யினோடு எக் காலமும் பழக்க முடையார், விட வேண்டு மென்று கூறிய ஈ தனைத்தி னுள்ளும் ஒன் றாயினும் விடார். பிறர் காண்ப தன்மையால் அகப் பற் றொன்றையுமே யொழிப்பார், எ - று.

வாக்குக் காயங்கள் நிவிருத்தியான விடத்துப் புறப் பற்றைப் பாதுகாத்தற்குத் தலை வருதலானும், அவை பிரவிருத்தியான விடத்து அகப் பற்றை யொழித்தற்குத் தலை வருதலானும், 'தலை

யம்' என்றார். புறப் பற்றோ டிருந்து அகப் பற்றை ஒழிக்கத் தொடங்குதல், அவ் விரு வகைக்கும் பழுதென்பதும், அகப்பற்றை ஒழிக்கத் தொடங்கினேன், புறப் பற்றை முன்னர் விட வேண்டு மென்பதும், 'பிறர் காண்ப தன்மையான் அகப் பற்றே விடுப்பார்' என்றமையால், தமக் கென அவர்க்கு அகப் பற்றுப் போய தின் றென்பதும் காண்க. (௫௧)

டாமுயு மகறிய
தின் றெனுஞ்சம், பந்தனு ருரையும் வேண்டிய தெய்தப்
படாதுசற் றமும்விடா விடினே, னெந்தைவாக் கரைய
ருரையுமா தியவாக் கியம்பிர மாணமா மெனக்கொள்,
புந்தியார் புறப்பற் றுறவகப் பற்றைப் போக்கவாய்ப்
போக்குத லிலரே. (52)

ப - ரை. தந்தை - தந்தை, தாய் - தாய், முதலாம் - முதலிய, பந்தம் - பந்தங்களை, நீங்கிலர்கள் - நீங்காதார்க்கு, உயும் - உய்ந்து போக, நெறியது - நெறி, இன்று - இன்று, எனும் - என்று (கூறிய), சம்பந்தனுர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர், உரையும் - வாக்கியத்தையும், தாம் - தாம், வேண்டியது - வேண்டியது, எய்த - எய்த, படாது - ஒணாது, சுற்றமும் - (மாதர் முதலிய) சுற்றமும், விடாவிடின் - விடாவிடின், என் - என்று, (கூறிய), எந்தை - எந்தை யாகிய, வாக்க - (திரு) நாவுக்கு, அரையர் - அரையர், உரையும் - வாக்கியத்தையும், ஆதிய - (இவை) முதலிய, வாக்கியம் - (ஆப்த) வாக்கியங்களையும், பிரமாணம் - பிரமாணம், ஆம் என - ஆகக், கொள் - கொள்ளுகின்ற, புந்தியார் - நன் மதி யுடையோர், புறப் பற்று - புறப் பற்று, உற - இருக்க, அகப் பற்றை - அகப் பற்றை, போக்க - ஒழிப்போம் (என்று), வாய் - வாய், போக்குதல் இலர் - போக்கார், எ - று. ஏ - அசை.

விடுக்குநர் புறப்பற் றதினுயிர்ச் சார்பை விடுத்துமற்
றையபொருட் சார்பைப், பிடிக்குத லொழுங்கன் றெனி
னுறை யிடமும் பெறாது தொழிதற் றெனவே, படிக்
கணீ யுரைக்கக் கேட்டன முனைப்போற் பற்றிசோக்
காமையி னன்றோ, விடுக்கனைத் தனைத்தும் விடுத்தன
ருலக மேத்துபத் திரகிரி முதலோர். (53)

ப - ரை. விடுக்குநர் - (அகப்பற்றை) ஒழிப்போர்க்கு, புறப் பற்றதின் - (இரு வகைச் சார் பாகிய) புறப் பற்றினுள், உயிர்ச் சார்பை - உயிர்ச் சார்பை, விடுத்து - விடுத்து, மற்றைய - மற்றை, பொருள் சார்பை - பொருட் சார்பை, பிடிக்குதல் - பிடிக்குதலும், ஒழுங்கு - மார்க்கம், அன்று - அன்று, எனின் - என்றால், உறை - (நீர் சொன்னவை யெல்லாம் விடுப்பினும்) இருத்தற்கு, இடமும் - (ஓர்) இடமாயினும், பெறாது - பிடியாது, ஒழிதல் - விடுத்தல், தீது - குற்றம், எனவே - எனவே, படிக்கண் - பூமி யின்கண், நீ - நீ (ஒருவனே), உரைக்க - சொல்ல, கேட்டனம் - கேட்டு (அறிந்தனம்), உனை - உன்னை, போல் - போல, பற்றி - கூர்ந்து, சோக்காமையின் - அன்றோ, அனைத்தும் - பற்றுக்கள் யாவும், என்று - என்று (அறிந்து எல்லாப் பற்றுக்களையும்), உலகம் - உயர்ந்தோர், ஏத்து - தோத்திரம் பண்ணுகின்ற, பத்திர கிரி - பத்திர கிரி (ராசா), முதலோர் - முதலாயினோர், விடுத்தனர் - விடுத்தார்கள், எ - று.

பொ - ரை. எ - து. அகப் பற்றை ஒழிப்போர்க்கு இரு வகைச் சார் பாகிய புறப் பற்றினுள், உயிர்ச் சார்பை விடுத்து, மற்றைப் பொருட் சார்பைப் பிடிக்குதலும், மார்க்க மன் றென்றால், நீர் சொன்னவை யெல்லாம் விடுப்பினும், இருத்தற்கு ஓ இட-

வயிறும் நிறையாது விடுக்குதல் குற்ற மெனவே, பூமியின்கண் நீ ஒருவனே சொல்லக் கேட்டு அறிந்தனம். உன்னைப் போலக் கடர்த்து விசாரியாமையா லன்றே, பற்றுக்க ளியாவும் துக்க மென்று அறிந்து, எல்லாப் பற்றுக்களையும், உயர்ந்தோர் தோத்திரம் பண்ணுகின்ற பத்திர கிரி ராசா முதலாயினோர் விடுத்தார்கள், எ - று.

'உன்னைப் போற் பற்றி நோக்காமையி னன்றே' என்றமையால், குறிப்பால் நீ அறியாமையினாலே கூறுகின்றா யென்பது காண்க. 'பத்திர கிரி முதலாயினோர்' எனவே, பட்டினத்துப் பிள்ளை முதலாயினோரையும் வருவித்துக் காண்க. (கூ)

பொருட் சார்பால் வரும் குற்றம், மேல் வருஞ் செய்யுளுட் கூறுகின்றார்.

துறந்தவன் பொருட்சார் புறவறி விலர்க்குத் துயனூ லாதிசாத் திரங்க, ளறைந்திதம் பேசிப் பொருள்கவர்ந் ததனு லச்சமு மிச்சையா திகளுஞ், செறிந்துற வகத்துள் துனியவூ னிருக்குஞ் செய்தியா னெய்சொரி தழல்போல், விறந்திடா மகவா தனையினைத் தனதோ ரெனத்தையெவ் வனைத்திருன் முடிப்பான். (54)

ப - ரை. பொருள் - பொருள், சார்பு - சார்பு, உற - இருக்க, துறந்தவன் - (உயிர்ச் சார்பைத்) துறந்தவன், அறிவி லர்க்கு - அறிவில்லாத பேர்களுக்கு, நூல - நூல, சாத்திரங்கள் - சாத்திர, ஆதி - முதலாயவற்றை, அறைந்து - சொல்லி, இதம் - (அவர்க்கு) இதமான, பேசி - (வார்த்தைகளைப்) பேசி, பொருள் - பொருளை, கவர்ந்து - வாங்கி (ப் புதைத்து), அதனுல் - அதனால், அச்சமும் - பயம், இச்சை - ஆசை, ஆதிகளும் - முதலியனவும்,

அகத்து - மாத்தின்கண், செறிந்து உற - பொருந்த, இனிமை யாகிய, ஊண் - ஊண்களை, உண்டு - புசித்து, இருக்கும், செய்தியால் - முறைமையால், நெய் - நெய்ப்பினை, சொரி - சொரிந்த, தழல் - அக்கினி, போல் - போல், மா - மாத்தினது, வாதனை - வாதனைகள், இறந்திடா - இறந்து போகா (ஆகலின்), பினை - பின்னர், தனது - தான், எணத்தை - (அகப் பற்றினை ஒழிக்க வேண்டு மென்று எண்ணிய) எண்ணத்தினை, எவ் வணத்தினால் - எந்த முறைமையால், முடிப்பான் - முடித்துக் கொள்வான், எ - று.

பொ - ரை. எ - து. பொருட் சார்பு இருக்க, உயிர்ச் சார்பைத் துறந்தவன், அறி வில்லாத பேர்களுக்கு ஞாந சாத்திர முதலாயவற்றைச் சொல்லி, அவர்க்கு இதமான வார்த்தைகளைப் பேசிப் பொருளை வாங்கிப் புதைத்து, அதனால் பய மாசை முதலியனவும், மாத்தின்கட் பொருந்த, இனிமை யாகிய ஊண் களைப் புசித்திருக்கு முறைமையால், நெய்யினைச் சொ போல், மாத்தினது வாதனைகள் இறந்து போகா வாக பின்னர்த் தான் அகப் பற்றினை ஒழிக்க வேண் எண்ணிய எண்ணத்தினை, எந்த முறைமையால் முடித்துக் கொள் வான், எ - று.

லாரக்கு ஞாந சாத்திர முதலிய . பொருள் கவர்தலினாலும், அதனாற் பய மாசை குரோத முதலிய வருதலாலும், செனக்கிய போசனங்களைப் புசித்தலாலும், மாதத்தின் கண் வாதனை நெய் சொரி தழல் போல், மேன் மேல் எழுதலிற், பொருட் சார்பு இருக்கத் துறந்தோனுக்கும் அகப் பற் கடா [illegible] ற்தனூற் காண்க. (௯௪)

பொருட் சார்பினுள் எல்லாவற்றையும் விட்டு, ஓரிடம் பற்றி யிருந்து தவம் பண்ணலாகாதோ வென்ற சீடனை நோக்கி, அவ் விடத்தால் வருந் துற்றங் கூறுகின்றார்.

ஒரோர் காலத்து அவ் விடத்தினை நீங்கி, இருள் காடு முதலிய இடத்துச் செல்லுங்கால், மனோ பயம் தோன்றலிற் பூரண பாவனை மறக்கும்; பனி மழை வெய்யில் காற்று முதலியவற்றாற், காயத் திற்கு வருத்தந் தோன்றலிற், சமபாவனை மறக்கும்; விளக்கிடல் அலகிடல் மெழுகல் முதலிய தொழில்கள் எக் காலமும் வேண்டு தலின், இராகத் துவேஷம் பிறக்கும்; அதனால், மனோ லயம் பண்ணக் கூடாது. செல்லு கொதுகு மூட்டை எறும்பு தேள் முதலிய உயிர்களுக்குச் சிவ காருண்ணியத்தை விடுத்துத் துன்பஞ் செய் தலின், மனத்தின்கண் அழுக் கேறும்; இவை யெல்லாத் துற வறத் திற்குப் பங்க மாகலின், தனக் கென வோரிடம் பிடித்தலும் ஆகாது என்றார். அவ் விடம் ஆகா தெனவே, பொதுச் சாவடி, புறத் திண்ணை, பாழ்ங் கோயில், மலை முழை, மர நிழல் முதலிய இடத்தில் இருக்க வேண்டு மென்ப தாயிற்று. (௫௫)

பிறிதுநோய் தன்னோய் போன்றுபோற் றானேற்
பெரிதுநூ லரிதினோர்ந் துணர்ந்த, வறிவினா லுண்டோ
வாவதென் றமையா னுறைதரு சராசர மெவைக்குஞ்,
சிறிதுமோர் துயர மறவியுற் றேனுஞ் செய்யுமே மெய்
யுணர் வடைவான், மறுவறு துறவைப் பொன்செய்வா
ரிகர்போல் வருந்திரா டொறும்வளர்ப் பவனே. (56)

ப - ரை. பிறிது - பிறிது (ஓர் உயிர்க்கு வந்த), நோய் - துன்பத்தினை, தன் - தனக்கு (வந்த), நோய் - துன்பத்தை, போன்று - போன்று, போற்றானேல் - போற்றிக்கொள்ளானாகில், பெரிது - பெரிது (ஆகிய), நூல் - சாத்திரங்களை, அரிதின் - அரி தினால், ஓர்ந்து - கற்று, உணர்ந்த - அறிந்த, அறிவினான் - அறி வினால், ஆவது - (ஒரு பயன்) ஆவது, உண்டோ - உண்டோ, என்றமையான் - என்று (திரு வள்ளுவ நாயனார்) கூறினமையால்,

அறைதரு - சொல்லப்பட்ட, சர அசரம் - சராசரமாய் (உள்ள), எவைக்கும் - எல்லா வுயிர்கட்கும், சிறிதும் - சிறிதாயினும், ஒரு - ஒரு, அயரம் - துன்பத்தினை, மறவிபுற்றேனும் - மறந்தாயினும், செய்புமே - செய்வனே, மெய் உணர்வு - மெய்ஞ் ஞானத்தை, அடைவான் - பெறும் பொருட்டு, மறு - குற்றம், அற - அற்ற, துறவை - துற வறத்தினை, பொன் - பொன் (தேடுதல்), செய் - செய்யாநின்ற, வணிகர் - வாணிகர், போல் - போல், வருந்தி - (திரி கரணங்களினாலும்) வருந்தி, நாள் தொறும் - தினம் தோறும், வளர்ப்பனன் - வளர்ப்பவன், எ - று. வ - அசை.

பொ - ரை. எ - த. 'பிற தோ ருயிர்க்கு வந்த துன்பத் தினைத் தனக்கு வந்த துன்பத்தைப் போன்று, போற்றிக் கொள் ளாவிடின், பெரிய நூலிய சாத்திரங்களை அறிதலால் கற் றறிந்த அறிவினால் ஒரு பயனுமுண்டோ' வென்று திருவள்ளுவ நாயனார் கூறினமையால், சொல்லப்பட்ட சராசரமா யுள்ள எல்லா வுயிர் கட்கும், சிறி தாயினுமொரு துன்பத்தினை மறந்தாயினும் செய்வனே, மெய்ஞ் ஞானத்தைப் பெறும் பொருட்டுக் குற்றமற்ற துறவறத் தினைப் பொன் தேடுதல் செய்யாநின்ற வாணிகர் போல், திரி கரணங்களினாலும் வருந்தித் தினந் தோறும் வளர்ப்பவன், எ - று.

கல்வி யறிவிற்கும் பயன் சீவ காருண்ணிய மாகலின், 'அறி வினு லுண்டோ வாவது' என்றார். பொன் செய் வாணிகர், கொள்ளுதல், விற்றல், உரைத்தல் முதலியவற்றாற் பொருளை வளர்த்தல் போல், நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் ஓடல் முதலிய விடத்தும், உயிர்க் கொலை புரியாது, துற வறத்தினை வளர்க்க வேண்டு மென்பது காண்க.

'பெரிது நூ லறிந்தோர்க் குணர்ந்த வறிவினு லுண்டோ வாவது' என்றதற்கு உதாரணம்: ஞானவாசகம், (42) "மருளுறு மெனைப் புதிதி மயக்கறத் தெளிந்த வோர்க்கு, மருளறத் துறக்க

வாதா வுடலொரு பொருளு மில்லாத், தெருளினை யறித லானுஞ் சிவமெல் லுளமு மன்னு, மருளினை யறித லானு மவர்செய லருள தந்தான்." எ-ம், அருட் பிரகாசம், (43) "உயிர்த்த மென் றறிச் தானுதல் வேர்பல் லுயிர்களுற்ற, துயருக்கி ரங்கல்பு தமை கொல் வேலவருட் டோன்றன்முன்னுட், செயிருற்ற தேவர் குறை கேட்டி ரங்கித்தி குவளைத்து, டயர்வுற்ற குத்தகன் னிரக்க மாமணி யாய்த்தெனிலே." எ-ம, வரும. மற்றும வருவன வற்றுற் காண்க. (௫௬)

தனக்கினி யவனும் வகைசரா சரங்க ளினைகவென் றுமைக்குரைத் ததுவும், வினைக்கடல் கடந்த பாதரற்முற் சிவிகை சுமந்துசென் றதுவுமோர் மேலோர், பினைக்கொல் பாம் பாதி புறுதலஞ் செலுங்காற் பேணலிற் றலைகடந் திடும்போ, தினைக்கறை யாறு திபமரி யாதங் குரமுரி யாதியங் கிடுவார். (57)

ப-ரை. தனக்கு - (ஒருவன்) தனக்கு(த் தான்), இனியவன் - இனியவன், ஆம் - ஆய், வகை - (தன்னைப் பாதுகாக்கும்) முறைமை (போல்), சர அசரங்கள் - சராசரங்களாயுள்ள (உயிர்களை), நினைக - கருதுக, என்று - என, உமைக்கு - மகாதேவிக்கு, உரைத்ததுவும் - (மகா தேவர் அறிவாசாரய) கூறிய அதனையும், வினை - சரியை கிரியை யோகங்களுக்கு ஏதுவாகச் செய்யுஞ்) தொழி லாகிய, கடல் - கடலை, கடந்த - கடந்து நின்ற, பாதர் - பாதர், முன் - முன்னர், சிவிகை - சிவிகை, சுமந்து - சுமந்து (கொண்டும்), சென்றதுவும் - (உயிர்க் கொலை யாராது டைத்து) சென்ற அதனையும், ஓர் - விசாரித்து அறிந்த, மேலோர் - மேலானவர்களே, பினை - பின்னர், கொல் - கொல்லுகின்ற, பாம்பு - பாம்பு, ஆதி - முதலிய (துட்டப் பிராணிகள்), உறு - உறையும்,

(45) "ஏழெங்காமம் வெவ்வுயிரு ளிரக்காது துரும்பனைத்தும், பிறர்க் காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது, விழுங்காலை லூழ்த்து நீர்த்த விளைமலர்க ளனைவபேர்றி, யழுங்காவன் றனையுட்ட வம் புயங்க னருச்சிப்பான்." எ - ம், வரும். மற்றும் வருவனவற்றுக் காண்க. (௫௭)

தம்மிடத் தேனுந் தமக்கினி யவர்பா லேனுமோ ரிடர்
வந்து சாரி, னம்மவூழ் முறையென் றறிந்துமேழ் கடலோ
ரணுவென வுருகுமென் போல்வா, ரிம்முறை துயர்வே
றுயிருறி னிரக்க மின்றிய தன்றியுந் தம்மால், வெம்மைய
கொலையொன் றடையினு மதனூ ழென்பதென் மிகமுக
மலர்ந்தே. (58)

ப - ரை. தம்மிடத் தேனும் - தம்மிடத்தாயினும், தமக்கு - தமக்கு, இனியவர்பாலேனும் - இனியரா யுள்ள சுற்றத்தார் முதலி யோரிடத்தாயினும், ஓர் - ஓர், இடர் - துன்பம், வந்து - வந்து, சாரின் - பொருந்திற்றாயின், அம்ம - அதனை, ஊழ் - ஊழ், முறை - வினை (ப் பயன்), என்று - என்று, அறிந்தும் - அறிந்து (இருந்து)ம், ஏழ் - சத்த, கடல் - சாகரமும், ஓர் - ஓர், அணு - அணு, என - என்று (சொல்ல), உருகும் - (நெஞ்ச மெலாம் நெக்கு நெக்கு) உருகும், என் போல்வார் - எம் போலிகள், இ - இந்த, முறை - முறையே, வேறு - வேறு, உயிர் - (ஒரு) உயிர், துயர் - துன்பத்தினை, உறின் - அடையின், இரக்கம் - இரக்கம், இன்றியது - இன்றி யிருப்பது, அன்றியும் - அல்லாமலும், தம்மால் - தம்மால், வெம்மைய - (ஓ ருயிர்) வெவ்விதாகிய, கொலை - கொலை, ஒன்று - ஒன்று, அடையினும் - அடைந்த விடத்து, அதன் - அதன், ஊழ் - ஊழ் (வினை), என்பது - என்று சொல்வது, என் - என்னை, மிக - மிகவும், முகம் - முகம், மலர்ந்து - மலர்ந்து, எ - து. ஏ - அசை.

பொ - ரை. எ - து. தம்மிடத்தாயினும், தமக் கினியரா யுள்ள சுற்றத்தார் முதலியோரிடத் தாயினும், ஓர் துன்பம் வந்து பொருந்திற் றாயின், அதனை யவ்வினைப் பய னென்று அறிந்திருந்தும், சத்த சாகரமும் ஒ ரணு வென்று சொல்ல, நெஞ்ச மெல்லாம் நெக்கு நெக் குருகும் எம்போலிகள் இந்த முறையே வே றொரு உயிர் துன்பத்தினை அடையின், இரக்க மின்றி யிருப்ப தல்லாமலும், தம்மால் ஒ ருயிர் வெவ்வி தாகிய கொலை யொன்று அடைந்த விடத்து, அதனும் வினை யென்று சொல்வது என்னை மிகவு முக மலர்ந்து, எ - று.

துற வற முடையார்க்கு ஓ ருயிரால், ஓ ருயிர்க்குத் துன்பம் வந்த தாயினும், அதற்குத் தம்மை அறியாமல் தம்மால் ஓர் துன்பம் வந்த தாயினும், இரங்க வேண்டுமே யன்றி, இரக்க மின்றி யிருத்தல் பழு தென்பது காண்க. (இ-அ)

இம்மையி னிகழ்ச்சி மறுமையிற் சிறுமை யெய்து மென் றுயிர்க்கொலை புரியாச், செம்மையைங் கநக மாதி கைப் பற்றுத் துறவினைச் சிலரடைந் திடினுந், தம்மை யொத் துயிர்க ளனைத்தையுங் காணுந் தயவுயர் தயாநிய முதல, நும்மையு மோட்டிற் காட்டிலன் லினையிற்கான் றெவேரோர் தலைக்கலான் முடியா. (59)

ப - ரை, இம்மையின் - இம்மைக்கண், இகழ்ச்சி - (ஜீவர் களால்) பழிப்பும், மறுமையில் - மறுமைக்கண், சிறுமை - பிறவித் துன்பமும், எய்தும் - வரும், என்று - என்று (கருதி), உயிர் - உயிர்களை, கொலை - கொலை, புரியா - செய்யாத, செம்மை - செம்மையினையும், ஐ - ,, - , கனகம் - பொன், ஆதி - மண் பெண் என்னும் மூ வாசைகளையும், கை பற்று - பற்றுத, துறவினை - துறவினையும், சிலர் - (இந்த முறையே) சிலர், அடைந்திடினும் -

அடைந்தா ராயினும், தம்மை - தம்மை, ஒத்து - போல, உயிர்கள் - உயிர்கள், அனைத்தையும் - எல்லாவற்றினையும், காணும் - காணும், தயவு - தயவும், உயர் - உயர்ந்த, தபனியம் - பொன், முதல - ஆதி, மும்மையும் - மூவகையினையும், ஓட்டில் - ஓட்டினைப் போலவும், காட்டில் - காட்டினைப் போலவும், அன்னையில் - அன்னையைப் போலவும், காண் - காணும், துறவு - துறவும், ஒரு ஓர் - ஒரோர், தவர்க்கு - தவருக்கு, அலால் - அல்லது, முடியா - கூடாது, எ-று.

பொ-ரை. எ-து. இம்மைக்கட் சீவர்களாற் பழிப்பும், மறுமைக்கட் பிறவித் துன்பமும் வருமென்று கருதி, உயிர்களைக் கொலை செய்யாத செம்மையினையும், பொன் மண் பெண்ணென்னு மூவகையையும் பற்றாத துறவினையும், இந்த முறையே சிலர் அடைந்தா ராயினும், தம்மைப் போல் உயிர்களெல்லாவற்றினையும் காணும் தயவும், உயர்ந்த பொன் ஆதி மூவகையினையும், ஓட்டினைப் போலவும், காட்டினைப் போலவும், அன்னையைப் போலவும், காணுந் துறவும், ஒரோர் தவருக்கல்லது கூடாது, எ-று.

இம்மை மறுமைகளைக் குறித்துக் கொலை செய்யாது, பொன் ஆதி மூவகையையும், ஓட்டாதிக ளாகக் காண்போர், துறவு சாதக ரென்றும், அவ்விரு வகையையுங் குறியாது, சுபாவ மாகத் தம்மைப் போ லுயிர்களைக் கண்டு, பொன் ஆதிகளை, ஓட்டாதிக ளாகக் காண் போர், துறவு சாத்திய ரென்றும் அறிக; அச் சாத்தியர் அரிய ராகலின், 'ஒரோர் தவர்க்கலான் முடியா' என்றார். (௯)

அறைதவிர்க் கொல்லா நலத்தது நோன்மை யெனவரு
றறவுசா ரகத்தா, றறமலி துறவே சினமழுக் காறங்
குறுமையாற் கொடுஞ்சொல்கூ றுமை, புறமுரை யாமை
மருவிய விரண்டாத் பொருளின்மெய் யுறுதியோர்க்
குரைத்த, விறைபெருந் தவத்தோர் வாக்கினின் நான்கு
மிகழுமென் றியம்புவர் நெடியோர். (60)

ப - ரை. கொல்லா - (உயிர்களைக்) கொல்லாத, நலத்தது - நலத்தினை யுடையது, நோன்மை - தவம், என - என்று, அறைதலின் - (திருவள்ளுவ நாயனார்) கூறுதலின், துறவு - (ஒன்றினும் பற்றற்ற) துறவு, சார் - பொருந்திய, அகத்து அகம் - உள்ளத்தின்கண், அருள் - (சிவ) காருண்ணியம், உறும் - (நிலை பெற்று) இருக்கும், அஃது - அது, உறவே - (நிலைபெற்று) இருக்கவே, அங்கு - அவ் வுள்ளத்தின்கண், சினம் - (உயிர்களிடத்து) கோபமும், அழுக்காறு - பொறாமையும், உறாமையால் - பொருந்தாமையால், கொடுஞ் சொல் கூறாமை - (கோபம் இன்மையால்) கொடுஞ் சொற் கூறாமையும், புறம் - (பொறாமை இன்மையால்) புறம், உரையாமை - கூறாமையும் (உள வாகும்), மருவிய - பொருந்தாநின்ற, இரண்டால் - (இவை) யிரண்டினாலும், பொருவு - (கொடுஞ் சொற் கூறாமையால்) ஒப்பு, இல் - அற்ற, மெய் - மெய்ம்மை (கூறலும்), உறுதி - (புறங் கூறாமையால் உயிர்களுக்கு) உறுதி (மொழிகளை), ஓர்ந்து - ஆராய்ந்து, உரைத்தல் - கூறுதலும் (உள வாகும். ஆகலின்), இ - இவை, நான்கும் - நான்கும், நிறை - நிறைந்த, பெரும் - பெரிய, தவத்தோர் - தவத்தினை யுடையார், வாக்கின் - வாக்கின்கண், திகழும் - விளங்காநிற்கும், என்று - என்று, இயம்புவர் - சொல்லுவர், நெடியோர் - பெரியோர், எ-று.

பொ - ரை. எ - து. 'உயிர்களைக் கொல்லாத நலத்தினை யுடையது தவ' மென்று திருவள்ளுவ நாயனார் கூறுதலின், ஒன்றினும் பற்றற்ற துறவு பொருந்திய உள்ளத்தின்கட் சிவ காருண்ணிய நிலை பெற் றிருக்கும்; அது நிலை பெற் றிருக்கவே, அவ் வுள்ளத்தின்கண் உயிர்களிடத்துக் கோபமும், பொறாமையும் பொருந்தாமையாற், கோப மின்மையாற் கொடுஞ் சொற் கூறாமையும், பொறாமை யின்மையாற் புறங் கூறாமையும் உள வாகும். பொருந்தாநின்ற இவை யிரண்டினாலும், கொடுஞ் சொற் கூறாமையால் ஒப் பற்ற மெய்ம்மை கூறலும், புறங் கூறாமையால், உயிர்

களுக்கு உறுதி மொழிகளை ஆராய்ந்து கூறுதலும் உள வாகு மாகலின், இவை நான்கும் நிறைந்த பெரிய தவத்தினை யுடையார் வாக்கின்கண் விளங்காதற்கு மென்று சொல்லுவர் பெரியோர், எ-று.

உள்ளத் தூய்மை யில்லாதார்க்கு அருளின்மையாற் கோபமும், பொறாமையும் உடையா ராகலிற், கொடுஞ் சொற் கூறுதலும், புறங் கூறுதலும், பொய்ம்மை கூறுதலும், பயனில் சொற் கூறுதலும் ஆகிய இந் நான்கும் நிலவாது வாக்கின்கண் விளங்கு மென்பது காண்க. இதனால் உள்ளத் தூய்மையுடையோரே மனம் வாக்குக் காயங்களினாலும் நன்மை யுடையோ ரென்ப தறிக. புறங் கூறல்—பிறரைக் காணாத விடத்து இகழ்ந்து கூறுதல். உறுதி மொழி—வீட்டினை அடைதற்கு ஏது வான மொழி. (௬௦)

கான்றசோ றதனிற் கண்டுபொய்ப் போக மனைத்தை யுங் கைவிடுத் திடினுந், தோன்றுல கினைமெய் யெனக் கொடு மீக்கூற் றுறவிருப் படையினத் துறவோன், சான்ற தா யுளதன் ஞானமி லெனவுந் தற்பரா னந்தமுற் றவனைப், போன்றிரு விழிமேற் செருகிவீண் டுரைக்கும் பொய்யை யெவ் விதத்தினுற் போக்கும். (61)

ப-ரை. கான்ற - கக்கின, சோறதனில் - சோறு போல், பொய் - (மாயா காரிய மாகிய) பொய், போகம் - போகங்கள், அனைத்தையும் - அனைத்தினையும், கண்டு - கண்டு, கை விடுத் திடினும் - துறந்தா னாயினும், தோன்று - (கானற் சலம் போற்) பொய்யாய்த் தோன்றுகின்ற, உலகினை - பிரபஞ்சத்தினை, மெய் - மெய் (ஆக), என - கருதி, கொடு - கொண்டு, மீக்கூற்று - கீர்த்தியை, உற - அடைய, விருப்பு - விருப்பம், அடையின் - உற்றுளாயின், அ - அந்த, துறவோன் - துறவியானவன், சான்ற

ஜெரிசாம் பரிசம் பழுதுறா கிரியவே துவமாம், புன்னெஞ்சா லவனும் போய்நர கெய்திப் பூமியுள் ளளவுமே யுறுவல்.” எ - ம், மற்றும் வருவனவற்றுற் காண்க. (௬௧)

இந்திர னருள்கைப் பிடித்தெலாம் விடுத்தோ னேவல
னொருவனோ டுறினுஞ், சித்தசஞ் சலமுண் டவனொரோர்
காலை செயுஞ்செயல் பிழைக்கினுட் சீற்றம், வைத்திடப்
படுத லாற்றன துடற்பால் வந்தொரு பிணியுறிற் றுணி
வோ, டத்தனே யுளனென் றிருத்தலி னிருத்த லரித
னென் றனையுறி னதனால். (62)

ப - ரை. இ - இந்த, திரன் - முறைமையே, அருள் - (சிவ) காருணியம் (ஒன்றுமே), கை - கை, பிடித்து - பிடித்து, எலாம் - (பற்றுக்களாயுள்ளன) எல்லாவற்றினையும், விடுத்தோன் - துறந்தவன், ஏவலன் - ஏவலாளன் (ஆகிய), ஒருவனோடு - ஒருவனுடனே, உறினும் - (கூடி) இருந்தான் ஆயினும், அவன் - அவன், ஒரு ஓர் - ஓர் ஓர், காலை - காலத்து, செயும் - செய்யும், செயல் - (ஏவற்) பணி விடைகளுள், பிழைக்கின் - (ஒவ்வொன்று) தப்பச் செய்தானாயின், உள் - உள்ளத்தில், சீற்றம் - கோபம், வைத்திடப் படுதலால் - வைக்கப்படுதலாலும், தனது - தனது, உடற்பால் - தேகத்தின்கண்ணே, ஒரு - ஒரு, பிணி - வியாதி, வந்து - வந்து, உறில் - அடைந்தால், அத்தனே - (அவ்வியாதியைப் போக்குதற்குச்) சிவனே, உளன் - உளன், என்று - என்று, துணிவோடு - (தான்) துணிவோடு, இருத்தலின் - இருத்தல் போல், அனென்றனை - அவனுக்கு, உறின் - (ஓர் வியாதி வந்து) அடையின், இருத்தல் - (அங்ஙனம்) இருத்தல், அரிது - கூடாது, அதனால் - அதனாலும், சித்த சஞ்சலம் - சித்த சஞ்சலம், உண்டு - தோன்றும், எ - று.

துன்பங்கள், இலன் - இலன், என்று - என்று, ஓதலால் - (திரு வள்ளுவ நாயனார்) கூறுதலின், அனைத்தும் - (பற்றுக்களா புள்ளன) எவையும், துயர் - துன்பங்களை, தரும் - தரும், என - என்று, ஈந்து - (அறிந்து) துறந்து, உயர் - (எப் பொருள் களுக்கும்) மேலாய், பரம் - உயர்ந்த, பொருளினை - (மெய்ப்) பொருளினை, காட்டும் - அறிவிக்கும், தீது - குற்றம், இல் - இல்லாத, ஓர் - ஒப் பற்ற, குரவன் - ஞானாசாரியன், எங்கு - எவ் விடத்தில், உளன் - இருக்கின்றான், என - என்று, நறவு - தேன், பொலி - செறிந்த, மலர் - மலரினை, தேடும் - தேடும், வண்டினை - வண்டினை, போல் - போல், அலை - அலை, கடல் - கடல், சூழும் - சூழ்ந்த, பூதல மிசை - பூமியின்கண்ணே, ஓர் - ஒரு, துறவினேன் - துறவியானவன், தேடும் - தேடுவான், எ - று.

பொ - ரை. எ - து. 'யா தொன்றினை யா தொன்றினை ஒருவன் நீங்கியான் அவன் அதனுல் அதனுல் வருந் துன்பங்கள் இல' னென்று திரு வள்ளுவ நாயனார் கூறுதலின், பற்றுக்களா புள்ளன எவையும் துன்பங்களைத் தருமென்று அறிந்து துறந்து, எப் பொருள்களுக்கும் மேலா புயர்ந்த மெய்ப் பொருளினை அறி விக்குங் குற்ற மில்லாத ஒப் பற்ற ஞானாசாரியன், எவ் விடத்தில் இருக்கின்றா னென்று தேன் நிறைந்த மலரினைத் தேடும் வண்டினைப் போல், அலை கடல் சூழ்ந்த பூமியின்கண்ணே ஒரு துறவியானவன் தேடுவான், எ - று.

தே னிரம்பிய மலரைத் தேடும் வண்டினைப் போலச், சிவ காருணியம் ஈசுர பத்தி பாச வைராக்கியம் பிரம ஞானம் என்னும் நான்கும் நிறைந்த ஞானாசாரியனைத் தேடுகின்றா னென்ப தறிக. ஆல் - அசை.

அவர்களுடனே (கூடி), பழகார் - பழகார், தத்துவ - (பர) தத்துவ, நிலை - நிலைமையை, தலைப்படுவோர் - அடையும் நன் னெறிக்கண் விரைந்து செல்வோர், எ - று.

பொ - ரை. எ - று. யுத்த களத்தைச் சாராது அதற்குப் புறம்பாய்த் திரிகின்ற ஒருவன், களத்தினைச் சார்ந்து தனக் கெதிரே ஆயுத பாணிக ளாய் வந்து நின்ற வீரரைப் பார்த்து,மிருந்த பராமக்கிரமங்களைச் சொன்னு னாயினும், அக் களத்திற் சென்று யுத்தம் பண்ணுது புறத்து நின்று கூறுதலால், அவனை வீர னென்று தெளி வுறார். அது போல, மதத்திற்குச் சம்மதமாய்ப் பொருந்தும்படி துறவு சமாதிகளைக் கூறினு ராயினும், அவற்றிற்கு உரிய நடக்கை யின்றிப் புற நடக்கைய ராயின், அவரை வீட்டினை அடைவித்தற்கு ஏது வாகிய நமரென்று தெளிந்து, அவர்க ளுடனே கூடிப் பழகார், பரத்துவ நிலைமையை அடையும் நன் னெறிக்கண் விரைந்து செல்வோர், எ - று.

புறந் திரி பொருவன் சமர்க் களத்துஞ் செல்லாது, அதனைச் சார்வாரோடுங் கூடாது, இடையே நின்று பராக்கிரமங் கூறுதலின், அவனை வீர னல்ல னென்றும், பேடி யென்றும் அறிகின்றது போல், அய லடையினர் துறவு சமாதிகட்கு உரிய நன் னெறியுஞ் செல்லாது அந் நெறி செல்வாரோடுங் கூடாது, இடையே நின்று அவற்றிற்கு உரிய நெறி மாத்திரங் கூறுதலின், அவரைத் துறவு சமாதி யுடைய ரல ரென்றும், கூடா வொழுக்க முடையவ ரென்றும் அறிந்து கொள்க.

'அமர்தராத் துறவு சமாதி யோதிடினு மவர்திறுக் கயனடை யினரேல்' என்றதற்கு உதாரணம்: அநுபவ சித்தி. (48) "மறைக ளாகம முதற்கலை முழுதையு மயலற மிகவோதிக், குறைவி லா வகைப் பொருடனை மதுரமாக் கூறவல் லவரேனு, நிறைவ தாகிய

அடைந்து, உலகில் - உலகத்தின்கண், திகழினும் - விளங்கா நின்றாராயினும், எலாம் - எல்லா, உயிர்க்கும் - உயிர்களிடத்தும், தயவும் - காருணியமும், சார் - (தாம்) அடைந்த, அருள் - கிருபா மூர்த்தி யாகிய, குரு - ஞாநாசாரியரிடத்து, பத்தியும் - பத்தியும், இலார்தமையும் - இல்லாதாரையும், தமர் - தமர், என - என்று (கருதி), பழகவும் - (அவருடன் கூடிப்) பழகவும், தருமே - தருமோ, எ - று.

பொ - ரை. எ - து. பாரின்க ணுள்ளோர் யாவரும் நீரின்க ணெழுகின்ற தாமரைப் பூவைக் கொய்து கொள்ள விரும்புதலே யன்றி, ஆகாயத்தின்கண் விளங்காநின்ற தாமரைப் பூவைக் கொய்து கொள்ள விரும்பார்கள், விநோத வித்தையினை யுடையார் இந்திர சாலம் பண்ணுத லென்று அறிந்து; அது போலச், சிறப்பினை யுடைய துறவு சமாதிகளை அடைந்து, உலகத்தின்கண் விளங்காநின்றாராயினும், எல்லா வுயிர்களிடத்தும் காருணியமும், தாம் அடைந்த கிருபா மூர்த்தி யாகிய ஞாநாசாரியரிடத்துப் பத்தியும், இல்லாதாரையும் தமரென்று கருதி அவருடன் கூடிப் பழகவுந் தருமோ, எ - று.

தாமரைப் பூத் தோன்றுதற்கு இடம் நீரே யன்றி, அந்தரம் இடமாகாமையால், இதன்கண் தோன்றிய பூப்பூப் போலத் தோன்றுவதே யன்றிப் பூ வன்றென்றும், விநோதிகள் சாலம் பண்ணுத லென்றும், அறிந்து, விரும்பாது உலகர் விடுத்தல் போல், துறவு சமாதிகளுக்கு ஏது வாகிய சீவ காருண்ணியம், ஈசர பத்தி யில்லாத துறவு சமாதிகள், அவை போலத் தோன்றுவன வன்றித், துறவு சமாதிக ளல்ல வென்றும், அவர் அவை போலக் காட்டுகிறா ரென்றும் அறிந்து, அவரோடும் பழகாது நீங்க வேண்டு மென்பது கண்டு கொள்க. ([illegible])

*இதுநெறி யெனவோ ரூர்க்கு மற்றொருவ னேகினு மாத்தன்வாய்க் குறிக, ளதுதனிற் காணு விடத்துல குமோ ரடிபெயர்த் திடுகல ரதுபோ, லெதிரறு சமாதி யாதிபெற் றுடையோ ரென்னினு முன்னவ னுரைத்த, சதுர்மறை யாக மாந்தநீத் தகரேற் றமரென லவரையுந் தருமே.* (66)

ப - ரை. ஒருவன் - ஒருவன், ஓர் - ஓர், ஊர்க்கு - ஊர்க்கு, நெறி - வழி, இது - ஈது, என - என்று, ஏகினும் - (அழைத்துச்) சென்று ஏகினும், ஆத்தன் - (தமக்கு) ஆப்தனு யுள்ளவன், வாய் - வாயாற் (கூறிய), குறிகள் - அடையாளங்கள், அதுதனில் - அந்நெறியிலே, காணு விடத்து - காணாத விடத்து, உலகரும் - (அதனை மாறுநெறி யென்று கருதி) உலகத்தாரும், ஓர் - ஓர், அடி - அடி, (ஆயினும்), பெயர்த்து - பெயர்த்து, இடுகலர் - வைத்திடார்கள், அது - அது, போல் - போல, எதிர் - ஒப்பு, அறு - இல்லாத, சமாதி - சமாதி, ஆதி - முதலு குரு பக்தி சிவ காருணியம ஆகிய நன்மைகளையும், பெற்று உடையோர் - அடைந்தார்கள், என்னினும் - ஆயினும், முன்னவன் - கடவுள், உரைத்த - கூறிய, சதுர் - நான்கு, மறை - வேதமும், ஆகம - (இருபத் தெட்டுத் திவ்விய) ஆகமமும், அந்த - (ஆகிய இவற்றின்) முடிவாய் உள்ள வாக்கியங்களை, நீத்தகரேல் - நீத்துக் கூறினாராயின், அவரையும் - அவரையும், தமர் - தமர், எனல் - என்று, (சொல்லலும்), தருமே - தருமோ (தகாது), எ - று.

பொ - ரை. எ - று. ஒருவன் ஓரூர்க்கு வழி ஈதென்று அழைத்துச் சென்றானாயினும், தமக்கு ஆப்தனு யுள்ளவன் வாயாற் கூறிய அடையாளங்கள், அந்நெறியிலே காணாத விடத்து, அதனை மாறு நெறி யென்று கருதி உலகத்தாரும் ஓரடியாயினும் பெயர்த்து வைத்திடார்கள். அது போல ஒப்பில்லாத சமாதி முதலு

குரு பத்தி சிவ காருணியம் ஆகிய நான்கினையும் அடைந்தார்க ளாயினும், கடவுள் கூறிய நான்கு வேதமும், இருபத் தெட்டுத் திவ்வியாகமமு மாகிய இவற்றின் முடிவா யுள்ள வாக்கியங்களை, இகழ்ந்து கூறினு ராயின், அவரையும் நம ரென்று சொல்லலும் தகுமோ தகாது, எ - று.

ஒருவன் ஓரூர்க்கு வழி ஈதென்று அழைத்துச் சென்று னாயினும், தமக்கு ஆப்தன் கூறிய அடையாளங்கள், அந்நெறியிலே காணாத விடத்து, அதனை மாறு நெறி யென்று ஓரடி யாயினும் பெயர்த்திடாத உலகர் போல, சமாதி யாதி யுடையோர் வீ டடையும் நெறி கூறுங்கால், கடவுள் கூறிய வேதாகம முடிவு வாக்கியத் தின்படி கூறாது, அதனை மறுத்துக் கூறினு ராயின், இந் நெறி மாறு நெறி யென்று கருதி, இவரோடு பழக லாகா தென்பது கண்டு கொள்க. 'சதுர் மறையாகமார்த்தம்' எனவே, ஞானங் கூறிய வாக்கிய மென்பதும், ஞானங் கூறுதற் பொருட்டுச் சரியை கிரியை யோகங்களை மறுத்துக் கூறினும், ஞானங் கூறிய வாக்கியங்களை மறுத்துக் கூறுதல் நெறியன் றென்பதுங் காண்க. நிந்தகர்= புறச் சமயத்தோர்கள். (கக)

சங்கறை முறையிற் றேர்ந்துபா ரிதன்மீ தெங்கணுந் தேடியோ ரிடத்தில், ஞெங்கருண் முதல நான்குமோர் வடிவா யுளதென மறையினிற் றுரைக, டாங்குநா வொடுஞ் செங் குவளைமார் பொடும்போர் சரணொடுஞ் சரணை வடைந்தோர், திங்கொழித் தருள்வன் திகழுமோர் குரவற் கண்டெனக் குளிர்ந்தனன் றெனிஞன். (67)

ப - ரை. சங்கு - இவ்விடத்து, அறை - கூறிய, முறையில் - முறையே, தேர்ந்து - (ஞானாசாரியனது இலக்கண மெல்லாம் உடையோன் எவ்வன னென்று) ஆராய்ந்து, பாரிதன் மீது -

பூமியின்கண்ணே, எங்கணும் - எவ்விடத்தும், தேடி - தேடி, ஒர் - ஒர், இடத்தின் - இடத்தின்கண், ஓங்கு - உயர்ந்த, அருள் - சிவகாருணியம் (சரை பத்தி பாச வைராக்கியம் பிரம ஞானம் என்று), நான்கும் - நான்கும், ஒர் - ஒரு, வடிவு - வடிவம், ஆய் உளது - கொண்டது, என - போல், மறையின் - வேதத்தினது, அந்த - முடிவு (ஆய் உள்ள), உரைகள் - (மகா வாக்கியமே முதலிய) வாக்கியங்களை, தாங்கும் - தரிக்கின்ற, தாளொடும் - தாளுடனும், செம் குவளை - செங் கழுநீர் மாலை (விளங்குகின்ற), மார்பொடும் - மார்பகத்துடனும், பொன் - பொன் (போன்ற), சரணொடும் - திரு வடிகளுடனும், சரண் என - (அத் திருவடிகளில்) அடைக்கலமாய், அடைந்தோர் - (வந்து) அடைந்த பக்குவரது, தீங்கு - (அஞ்ஞான மாகிய) பொல்லாங்கை, ஒழித்தருள்வான் - நீக்கும் பொருட்டு, திகழும் - விளங்குகின்ற, குரவன் - ஞானாசாரியனை, கண்டு - கண்டு (தெரிசித்து), உளம் - இதயம் (எல்லாம்), குளிர்ந்தனன் - குளிர்ந்தனன், தெளிஞன் - (அந்த) அறி வுடையோன், எ - று.

பொ - ரை. எ - று. இவ் விடத்துக் கூறிய முறையே ஞானாசாரியனது இலக்கண மெல்லாம் உடையோன் எங் குள னென்று ஆராய்ந்து, பூமியின்கண்ணே எவ் விடத்தும் தேடி, ஒரிடத்தின்கண் உயர்ந்த சிவ காருணியம் சரை பத்தி பாச வைராக்கியம் பிரம ஞானம் என்று நான்கும் ஒரு வடிவங் கொண்டது போல், வேதத்தினது முடிவா புள்ள மகா வாக்கியமே முதலிய வாக்கியங்களைத் தரிக்கின்ற தாளுடனும், செங் கழுநீர் மாலை விளங்குகின்ற மார்பகத்துடனும், பொன் போன்ற திரு வடிகளுடனும், அத் திருவடிகளில் அடைக்கலமாய் வந்து அடைந்த பக்குவரது, அஞ்ஞான மாகிய பொல்லாங்கை நீக்கும் பொருட்டு விளங்குகின்ற, ஞானாசாரியனைக் கண்டு தெரிசித்து இதய மெல்லாம் குளிர்ந்தனன் அந்த அறி வுடையோன், எ - று.

'முக்கருண் முதல நான்குமோர் வடிவாய்' என்றதனாலும், 'மறையி னீற்றனாக டாங்கு நவெனாடும்' என்றதனாலும், ஆசாரி யனது இலக்கண மெல்லா முடைய னென்பது காண்க.

'சாவெனை வடைந்தோர் தீங்கொழித் தருள்வான்' என்ற தற்கு உதாரணம்: தத்துவ ராயர் சொன் மணி மாலை—அகவல்.
(51) "ஒளித்தரு—மறிவை சக்கல னமைத்துத் துறவி, னுமக் கம்பு நாட்டி யோம, வருளாங் கயிற்றிற் பிறழ்வறக் கட்டிப், பத்தி யென்னும் பாய்பூ ரித்து, முத்தி யூரிற் றப்பை யுய்த்தருள், சொரூப னென்னு மொருமீ காம, னருந்தவர்க் கானின் பாதந், திருந்தவைக் கிவர்தஞ் சென்னியின் மிசையே." எ - ம், மற்றும் வருவனவற்றாற் காண்க. (கஎ)

காரிய மாக லாற்சகம் படைக்குங் காரணன் குலாலனி னுளனென், றோரியல் பெனவேழ் கடலுமொன் றுக்கி யொப்பிடுங் கருணைய னேனும், பேரிவை பிறப்புத் தனை யடைந் தவர்க்குப் பிணையுறு வகைகெடப் பார்க்குங், கூரிய விழிபோ னுதலி னறவுங் கொடியனு மாகுமக் குரிசில். (68)

ப - ரை. சகம் - பிரபஞ்சம், காரியம் - (மாயா) காரியம், ஆகலின் - ஆகலின் (அதற்குக் காரணமா யுள்ள மாயை சடமாக லின், இதனை), படைக்கும் - காரியப்படுத்தும், காரணன் - (நிமித்த) காரணன் (ஆகிய கடவுள்), குலாலனில் - (கட கலச முதலா யுள்ள பாண்டங்கள் மண்ணினது காரியம் அவைக்குக் காரண மாகிய மண் சட மாகலின், இதனைக் காரியப்படுத்தும் நிமித்த காரண னாகிய) குலாலன் போல், உளன் - இருக்கின்றான், என்ற - என்று, ஓர் - (மேலாகிய கடவுளுக்கு நீ யாகிய குலாலனை உவமை கூறுகின்ற) ஒரு, இயல்பு - முறைமை, எனா - போலு,

ஏழ் - (உவமை கூறப்படாதாயினும்) சத்த, கடலும் - சாகரங்களையும், ஒன்று - ஒன்றாகக், ஆக்கி - கூட்டி, ஒப்பிடும் - உவமை கூறுகின்ற, கருணையனேனும் - கிருபா சமுத்திரமா யிருந்தானாயினும், தனை - தன்னை, அடைந்தவர்க்கு - (வந்து) அடைந்த பக்குவர்க்கு (பேரும் பொருந்திய பிறப்பும் இவையே யன்றி), பினை - பின்னர், பேர் - (அந்தப்) பேரும், இவை - (பொருந்திய), பிறப்பு - பிறப்பும், உரு வகை - வாராதபடி, கெட - நாசமாக, பார்க்கும் - பார்க்கின்ற, கூரிய - நுண்ணிய, விழியோன் - விழிகளை யுடையோன், ஆதலின் - ஆகலின், அறவும் - மிகவும், கொடியனும் - கொடிய தன்மையினை யுடையவனும், ஆகும் - ஆவன், அ - அந்த, குரிசில் - ஆசாரியன், எ - று.

பொ - ரை, எ - று. பிரபஞ்சம் மாயா காரிய மாகலின், அதற்குக் காரணமா யுள்ள மாயை சட மாகலின், இதனைக் காரியப் படுத்தும் நிமித்த காரண னாகிய கடவுள், கட கலச முதலா யுள்ள பாண்டங்கள், மண்ணினது காரியம், அவைக்குக் காரண மாகிய மண் சட மாகலின், இதனைக் காரியப்படுத்தும் நிமித்த காரண னாகிய குலாலன் போல், இருக்கின்றா னென்று, மேலாகிய கடவுளுக்கு ஈடாகிய குலாலனை உவமை கூறுகின்ற ஒரு முறையைப் போல், உவமை கூறப்படா தாயினும், சத்த சாகரங்களையும் ஒன்றாகக் கூட்டி உவமை கூறுகின்ற கிருபா சமுத்திரமா யிருந்தானாயினும், தன்னை வந்து அடைந்த பக்குவர்க்குப், பேரும், பொருந்திய பிறப்பும், இவையே யன்றிப், பின்னர் அந்தப் பேரும், பிறப்பும் வாராதபடி நாச மாகப் பார்க்கின்ற நுண்ணிய விழிகளை யுடையோ னாகலின், மிகவுங் கொடிய தன்மையினை உடையவனு மாவன் அந்த ஆசாரியன், எ - று.

கிருபா சமுத்திரத்திற்கு உவமை யின்மையால், கடவுளுக்குக் குலாலனை யுவமை கூறுதல் போல், 'ஏழ் கடலும் ஒன்றாக்கி ஒப்பிடுங் கருணையனேனும்' என்றார். 'கூரிய விழியோன்' என்றதனாலும்

'பெரியை பிறப்புத் தன்னை யடைந்தவர்க்குப் பின்னை புருவசை கெடப் பார்க்கும்' என்றதனுலும், மாயா காரிய காரண மெல்லாங் கடந்த நோக்க மென்பதூஉம், அந் நோக்கம் பெற்றோர்க்கும் அவைகள் நீங்கு மென்பதூஉம் காண்க. 'அறவன் கொடியனு மாகும்' என்றது தாடனை பூஜனை யாகத் தறித்ததென்க. இதனுட் சிவ காருணிய முடைய னென்ப தறிக. (௬௮)

செப்பிருங் கைலைக் குருமுறை மையிற்றன் சிரமிசைச் சரணம்வைத் துளவோர், மெய்ப்பர னருளை வினைதொறு முளர்த்தீ மெழுகுகல் லெனவுரு கிடினும், மைப்பவர் துடைத் தன்பினர்க்குவீ டளிக்கும் வல்லப முடையமற் றொருதா, னொப்புமிக் கிலியா கலினிறை பத்தி யுளனுமன் குருமல் லுடையான். (69)

ப - ரை. செப்பு - (யாவரும்) புகழுகின்ற, இரும் - பெருமை (பொருந்திய), கைலை - கைலாச, குரு - குரு, முறைமையில் - பரம்பரையின் (வந்து), தன் - தனது, சிர - சிரசின், மிசை - மீதே, சரணம் - திரு வடிகளை, வைத்து உள - சூட்டிய, ஓர் - ஒப் பற்ற, மெய் - ஞான, பரன் - ஆசாரியனது, அருளை - திருவரு ளை, வினை - வினைக்குக், தொறும் - தோறும், தீ - அக்கினியிற் (பட்ட), மெழுகு - மெழுகும், கல் - கல், என - என்று, (சொல்ல), உளம் - (அதனினும் அதிக மாக) உள்ளம் (எல்லாம்), உருகிடினும் - உருகாநின்றே னாயினும், அன்பினர்க்கு - (தன்னை அடைந்த) பக்குவர்க்கு, மை - களங்க மாய் (உள்ள), பவம் - பிறவித் துன்பத் தை, துடைத்து - மாற்றி, வீடு - வீட்டினை, அளிக்கும் - கொடுக் கும், வல்லபம் - சாமர்த்தியத்தினை, உடைய - உடைய, ஒரு தான் - ஒரு தான், ஒப்பு - சமானம், மிக்கு - அதிகம், இலி - இல்லையென், ஆகலின் - ஆதலின், இறை - ஈசர, பத்தி - பத்தி,

உளனும் - உடையனும், அன்று - அன்று, ஆகும் - ஆகுவன், அ - அந்த, உம்பன் - ஞானாசாரியன், எ - று. மற்று - அசை.

பொ - ரை. எ - து. யாவரும் புகழாநின்ற பெருமை பொருந்திய கைலாச குரு பாரம்பரையின் வந்து, தனது சிரின் மீதே திருவடிகளைச் சூட்டிய, ஒப்பற்ற ஞானாசாரியனது இருமையை நினைக்குந் தோறும், அக்கினியிற் பட்ட மெழுகுகல் லென்று சொல்ல, அதனினும் அதிக மாக, உள்ள மெல்லாம் உருகாநின்றே னாயினும், தன்னை அடைந்த பக்குவர்க்குச் சனகமா புள்ள பிறவித் துன்பத்தை மாற்றி, வீட்டினைக் கொடுக்கும் சாமர்த்தியத்தினை உடைய ஒரு நான், சமானாதிக மின்மையை யாதலின், சகா பத்தி புடையனு மன்றாகுவன் அந்த ஞானாசாரியன், எ - று.

இதன்கண் சகா பத்தி புடைய னென்பது காண்க. (கக)

கருடனை நினைவோர் பார்வையாற் பிறர்பாற் கடு
வொழித் தவிர்ப்பன நினைவோ, ரொருவரை நோக்கி
னவர்களும் பாச மொழித்தல்செய் துறவொடேய்த்
துறிது, மருண்மகட் புணர்ந்து ஞானசத் ததிபெற் றவ
ரொடு மகிழ்ந்திருந் தனைக், குருபரன் றன்னைப் பின்னை
யே நினைக் குடும்பியென் றுரைக்கவும் படுமால். (70)

ப - ரை. கருடனை - கருடனை, நினைவோர் - தியானஞ் செய்பவர், பார்வையால் - பார்வையால், பிறர்பால் - பிறர்மேல் (ஏறிய), கடு - விடம், ஒழித்திடுதலின் - நீக்குதல் போல், தனை - தன்னை, நினைவோர் - தியானம் பண்ணுவோர், ஒருவரை - (பிறர்) ஒருவரை, நோக்கின் - நோக்கினால், அவர்களும் - அவரிடத்தும், பாசம் - பாசங்களை, ஒழித்தல் - நீக்குதல், செய் - செய்யும்,

நறவொடு - தேறலுடனே, மடுத்து - கூடி, உறினும் - இருந்தா னுறினும், அருள் - சிவ காருணிய மாகிய, மகள் - பெண்மணியை, புணர்ந்து - கூடி, ஞான - ஞான (மாகிய), சந்ததி - புத்திரனை, பெற்று - பெற்று, அவரொடே - அவரோடும், மகிழ்ந்திருந்தனன் - (எக் காலமும்) மகிழ்ந்திருந்தனன், அ - அந்த, குருபரன் தன்னை - ஞானாசாரியனை, பின்னை - பின்னர், நேர் - ஒப்பு, இல்லா - அற்ற, குடும்பி - குடும்பி, என்று - என்றும், உரைக்கவும் படும் - சொல்லப் படும், எ - று. ஆல் - அசை.

பொ - ரை, எ - து. கருடனைத் தியானம் பண்ணுவோர் பார்வையாற் பிறர் மே லேறிய விடம் நீக்குதல் போல், தன்னைத் தியானம் பண்ணுவோர் பிற ரொருவரை நோக்கின், அவரிடத்தும் பாசங்களை நீக்குதல் செய்யுந் தேறலுடனே கூடி யிருந்தா னுறினும், சிவ காருணிய மாகிய பெண்மணியைக் கூடி ஞான மாகிய புத்திரனைப் பெற்று, அவரோடும் எக் காலமும் மகிழ்ந்திருந்தனன், அந்த ஞானா சாரியனைப் பின்னர் ஒப் பற்ற குடும்பி யென்றும் சொல்லப்படும், எ - று.

இதனுட் பாச வைராக்கிய முடைய னென்பது காண்க. (௭௦)

குலவுசெங் கதிரோ னிருளினை யுணராக் கொள்கை
போற் றெரு காலுஞ், சொருமதி யாமை யறிவினை
நூரத் தோன்றிலே யெனினுமத் துயோ, விலருமா சந்த
யுருவினை யறுக்கட் டுகத்தற் றினையொரு துணையின்,
மலவுட லைப்பாற் கலந்தவி விஃதோர் மடமைபெற்
றுடையது மாமால். (71)

ப - ரை. குலவு - (யாவராலும்) கொண்டாடப்படுகின்ற, செம் - செய்ய, கதிரோன் - கதிரை யுடைய சூரியன், இருளினை - இருளை, உணரா - அறியாத, கொள்கை - முறைமை, போல் -

குரவர் - ஞானாசாரியனை, பல நாம் - பல காலும், வலம் - வலமாக, வந்து - வந்து, பணிந்து - வணங்கி, அநுதினம் - எக் காலமும், தீரிய — ,, , துதி - தோத்திரம், செய்து - பண்ணி, அவற்றால் - அவ் வணக்கத் தோத்திரங்களினால், திரு - (இவன் பக்குவனு மென்று அறிந்து ஆசாரியனது) திரு, உளத்து - உளத்தில், அடைக்கவும் பட்டு - அடைக்கவும் அன் புடைய னுகி, தூரம் - (அவ் வாசாரியன் கோபித்தா னென்று தூரத்திலும் செல்லாமற் சந்தோஷித்தா னென்று சமீபத்திலும் சாராமல்) சேய்மை, அணிமை - அணிமைகளுக்கு, நடு - நடு வாய், இறை - (அவ் அருள்) இறைவன், கருணை - கிருபை, காக்கும் - வைக்கும், நாள் - நாள், அளவும் - அளவும், நின்று - நின்று, ஏவல் - ஏவற் பணிவிடைகளினால், இவன் தனக்கு - இவனுக்கு, ஒப்பு - ஒப்பார், ஆர் - யாவர், என - என்று (சொல்ல), செய்து - (பணிவிடை களைச்) செய்து, ஒள் - ஒள்ளிய, தாள் - திரு வடி (நிழலை), பெற்று - பெற்று, அரிய - (வீ டடைதற்கு) அரிய, வேண்டுவ - வேண்டும், முழுது - (உபதேச மொழிகள்) எல்லாவற்றினையும், அறிந்தான் - அறிந்தான், எ - று.

பொ - ரை. எ - து. பூமியின்கண் அட்டாங்க முதலிய அங்கங்களுடனே அந்த ஞானாசாரியனைப் பல காலும் வல மாக வந்து வணங்கி, எக் காலமும் தோத்திரம் பண்ணி, அவ் வணக்கத் தோத்திரங்களினால், இவன் பக்குவனு மென்று அறிந்து, ஆசாரி யனது திரு வுளத்தில் அடைக்கவும் அன் புடைய னுகி, அவ் வாசாரி யன் கோபித்தா னென்று தூரத்திலும் செல்லாமற், சந்தோஷித்தா னென்று சமீபத்திலும் சாராமற், சேய்மை அணிமைகளுக்கு நடு வாய், அவ் வருளிறைவன் கிருபை வைக்கு நா ளளவும் நின்று ஏவற் பணிவிடைகளினால், இவனுக்கு ஒப்பார் யாவ ரென்று சொல்லப் பணிவிடைகளைச் செய்து, ஒள்ளிய திருவடி நிழலை பெற்று, வீ டடைதற்கு அரிய வேண்டும் உபதேச மொழிக ளெல்லாவற்றினையும் அறிந்தான், எ - று.

பொருள்களை, தேர்ந்து - (அவரால் ஆராய்ந்து) அறிந்து, அ - அம், வணம் - முறையே, சிறிது - சிறிது, கால் - காலம், தொலைந்து - கழிந்த பின்னர், கற்குதல் - சிரவண (மனனங்கள்), ஆதி - முதலிய, அனைத்தும் - அனைத்தினையும், நீத்து - விட்டு (நீங்கி), என்றும் - எக் காலத்தும் (ஏகாந்த ஸ்தானத்தி லிருந்து நிஷ்டை கூடி), ஞான - ஞான, சாதகத்தின் - சாதகத்தினாலே, நாள் - நாள்களை, கழிப்பான் - போக்காநிற்பன், எ - று. தான் - அசை.

பொ - ரை. எ - து. சற்குரு கடாக்ஷத்தினாலே ஐயமும், திரிவு நீங்கி, வேதத்தின் முடிவாகிய மகா வாக்கியத்தினால், அறிகின்ற மெய்ப் பொருளை நிச்சயித்து அறிந்த பின், அந்த ஞானாசாரியனது திருவடிகளைத் தனக்கு முன்னர் அடைக்கலமாகப் புகுந்த பெரியோர் கூட்டத்தினை அடைந்திருந்து, ஒள்ளிய சாத்திரத்தின் மொழிகளினது அரிய பொருள்களை அவரால் ஆராய்ந்து அறிந்து, அம் முறையே சிறிது காலம் கழிந்த பின்னர்ச் சிரவண மனநங்கள் முதலிய அனைத்தினையும் விட்டு நீங்கி, எக் காலத்தும் ஏகாந்த ஸ்தானத்தி லிருந்து நிஷ்டை கூடி ஞான சாதகத்தினாலே நாள்களைப் போக்காநிற்பான், எ - று.

ஐயந் திரி வென்றவற்றுள், ஒன்றோ இரண்டோ வென்பது ஐயம். முன்னர் ஒன் றென்று துணிந்து, இரண் டென்பதும், முன்னர் இரண் டென்று துணிந்து, ஒன் றென்பதும், திரி வென் றறிக.

'ஒண் சொற்களி னரிய பொருள்க டேர்ந்து' என்றதற்கு உதாரணம்; பெருந் திரட்டு. (54) "ஒப்பி லமல னுறுதி வைத்த வுவமை போத வோதுவித்தல், செப்பும் பொருளைத் திரிவறத் தெளிகை பிறரைத் தெளிவிக்கை, தப்பா ததனை மத்தகத்தே தரிக்கை பெரளவுந் தரிசித்தல், வைப்பா யகுந்த மருந்தானிச் சிறந்த ஞான மகிமையே." எ - ம், மற்றும் வருவனவற்றுங் காண்க. (வை)

அரும்பொறி யின்மை பழியன்று பார்க்கு மறிவறிந்
தாள்வினை யின்மை, பெரும்பழி யெனலா லொருவன்வீட்
டின்பம் பெறுமைகொ டிகழ்கலர் பெரியோர், விரும்பந்
தடையும் வகையருட் குருவான் விளக்கிடு முளக்கையிற்
கனிபோல், வரும்படி நாளு முயன்றுறு மென்போல்
மதியிலார் தமையிகழ் வதலால். (75)

ப - ரை. பார்க்கும் - பாவர்க்கும், அரும் - அரி தாகிய, பொறி - செல்வம், இன்மை - இல்லாமை, பழி - பழிப்பு அன்று - அன்று, அறிவு - (அச் செல்வத்தினை அடையும்) உபாயம், அறிந்து - அறிந் திருந்தும், (அவ் வுபாய நெறிக்கண்), ஆள்வினை - முயற்சி, இன்மை - இன்மையே, பெரும் - பெரிய, பழி - பழிப்பு, எனலால் - என்று நிரு வள்ளுவ நாயனார் கூறுதலின், ஒருவன் - ஒருவன், வீட்டு இன்பம் - (ஞான சித்தடை இடையறாது கூடுமிடத்தும் அவ்) வீட்டு இன்பத்தினை, பெறுமை கொடு - அடையா திருத்தலைக் குறித்து, இகழ்கலர் - இகழார், பெரியோர் - பெரியோர், விரும்பு - விரும்பா நின்ற, அந்து - அந்த ஆனந்தத்தை, அடையும் - அடையும், வகை - நெறி, அருள் குருவான் - ஞானாசாரியனால், விளக்கிடும் - அறிந் திருக்கும், உளம் - உள்ளம், கையில் - கை, கனி - (கொவ்விப்) பழம். போல் - போல், வரும்படி - (அது) வரும்படிக்கு நாளும் - எந் நாளும், முயன்றுறு - (ஞான சாதகத்தின்கண்) முயற்சிப்படாத, என் - என், போல் - போலும், மதி - புத்தி, இலார்தமை - இல்லாரை, இகழ்வது - இகழ்வதே, அலால் - அன்றி, எ - று.

பொ - ரை. எ - று. யாவர்க்கும் அரி தாகிய செல்வம் இல்லாமை பழிப் பன்று; அச் செல்வத்தினை அடையும் உபாயம் அறிந் திருந்தும் அவ் வுபாய நெறிக்கண் முயற்சி யின்மையே பெரிய பழிப் பென்று திரு வள்ளுவ நாயனார் கூறுதலின், ஒருவன் ஞான சித்தடை இடையறாது கூடு மிடத்தும், அவ் வீட்டின்பத்தினை

அடையா திருத்தலைக் குறித்து இகழார் பெரியோர். விரும்புகின்ற அந்த ஆர்த்தத்தை அடையு நெறி ஞானாசாரியனால் அறிந் திருந்தும், உள்ளங் கை நெல்லிப் பழம் போல, அது வரும்படிக்கு எக் காலும் ஞான சாதகத்தின்கண் முயற்சிப்படாத என் போலும் புத்தி யில்லாரை இகழ்வரே அன்றி, எ - று.

எக் காலமு மாறாது ஞான சாதகத்தின்கண் முயலல் வேண்டு மென்பது இதனுட் காண்க. (எ)

பகர்தரு தொழிற்க ளனைத்துமோர் சிறிது பண்ண
வேண் டுவபணி விடுத்துப், புகலுரை யடக்கித் தனியிடத்
திருந்து போற்றிசெய் தருட்குரு பதம்பின், மிகமுயன்
றிதய வருத்தமெய் தாமன் மெலிந்துகை விடுதல்செய்
யாமல், வைமுக மாக்கி மகத்தைதா னொடறுமோ ரைம்புல
னொழித்தலை வறப்பான். (76)

ப - ரை. பகர்தரு - சொல்லாநின்ற, தொழிற்கள் - (நித்திய) கருமங்கள், அனைத்தும் - அனைத்தினுள்ளும், பண்ண - (இன்றி யமையாத) செய்ய, வேண்டுவ - வேண்டும் கன்மங்களில், ஓர் - ஒ- ரோர், சிறிது - சிறிது, பணி - (சீக்கிரத்திலே) செய்து. விடுத்து - விடுத்து, புகல் - புகல்கின்ற, உரை - வாக்கினை, அடக்கி - மௌன மாக்கி, தனி - ஏகாந்த, இடத்து - ஸ்தானத்தில், இருந்து - இருந்து கொண்டு, அருள் - கிருபா, குரு - ஆசாரியரது, பதம் - திரு வடிகளை, போற்றி - தோத்திரம், செய்து - பண்ணி, பின் - பின்னர், மிக - (அவர் கூறிய உபாயத்தின்படியே மனோ லயம் பண்ணத் தொடங்கும் போது அந்த உபாய நெறிக்கண்) மிகவும், முயன்று - முயற்சிப்பட்டு, இதய - மன, வருத்தம் - வருத்தமும், எய்தாமல் - அடையாமல், மெலிந்து - (எவ் விதத்தாலும் அடக்கினும் இது அடங்குவ தின்று மென்று உள்ளம்) வருந்தி, மெலிந்தும்,

பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றனரே." எ-ம், (59) "அச்சினு னின்ற பொருடன்னை யுள்ளுவோ, ருச்சியம் போதாக வுள்ளமாக் கோயிற்குப், பிச்சைபி டித்துண்டு பேதம றநினைக், திச்சைவிட் டோர்ந்த மெறிவி ருப்பரே." எ-ம். வரும், மற்றும் வருவன வற்றுற் காண்க. (எஎ)

ஞாதசா தகன்மற் றுதயமா திபினு ளையக்கொளு
மயக்கமா தலினு, மீனமார் விந்து மிருமெனு மகன்றோ
ரிகழ்ந்துகை விடுத்தவா தலினுந், தானிரந் தொருபோழ்
தருந்திடு முணவுஞ் சமமவாற் றாழினு மிகினு, முனதா
ருடற்க ளோயுறு மற்றைக் குறக்கமு மிருந்திடு மன்றே.(78)

ப-ரை. ஞாத - ஞாத, சாதகன் - சாதகம் பண்ணுகின்ற வன், உதயம் - (உச்சிக் காலந் தொழிந்து மற்றை) உதய (கால)ம், ஆதியின் - முதலிய (காலங்களின்), ஊண் - அன்னுதிகளை, மயக்க - புசிக்கல், ஒளு - ஆகாது, மயக்கம் - (தேக) மயக்கம், ஆதலினும் - வருதலினாலும், ஈனம் - இழிவினை, ஆர் - உடைய, விந்து - சுக்கிலம், மிரும் - வரத்தினையாம், எனு - என்று, அகன்றோர் - துறந்தோரால், இகழ்ந்து - இகழ்ந்து, கை விடுத்த - விடப்பட்டன, ஆதலினும் - ஆகலானும், தான் - தான், இரந்து - பிச்சை பெற்று, ஒரு - ஒரு, போழ்து - போது, அருந்திடும் - புசிக்கின்ற, உணவும் - புசிப்பும், சமம் அவாவ் - (எக்காலும் ஒரு) சமமாகப் புசியாமல், தாழினும் - குறைந்த தாயினும், மிகினும் - மிகுந்த தாயினும், ஊனது - ஊன், ஆர் - பொருந்திய, உடற்கள் - உடம்பின்கள், நோய் - வியாதி, உறும் - (வந்து) அடையும், அற்றைக்கு - அன்றைக்கு, உறக்கமும் - நித்திரையும், மிருந்திடும் - மிகுந்து வரும், எ-று. மற்று அன்று ஏ - அசை நிலை.

பொ-ரை. எ-று. ஞாத சாதகம் பண்ணுகின்றவனை உச்சிக் காலந் தொழிந்து, மற்றை யுதயகால முதலிய [illegible]

விரும்பி நன்று நீ தென்று பருக்காது) காடிச் (சோறாயினும்), சேர சோறாகும் - (நல்ல) சோறாயினும், பசி - பசியை (உடைய), தவன் - தவத்தோன், புசித்திடல் - புசிக்குதல், தரும் - முறைமை யாம், தவர் - தவத்தோர், நக - சிரிக்க, மனை - வீடு, தோறும் - தோறும், உழன்று - திரிந்து, எனக்கு - எனக்கு, அடிசில் - சோறு, நல்குமின் - கொடுமின், என்று - என்று (கேட்டு), ஒருவன் - ஒருவன், வேட்டு - (நாச் சுவை) விரும்பி (வாங்கி), உணவால் - உண்டலினும், அகத்து - (அவ்) வயிற்றில், உறு - உறு, பசியும் - பசியை, போக்கு - போக்குதலும், மற்று - அன்றி, அது கொடு - (அன்னம்) உண்டது கொண்டு, அதிகம் - அதிகமாக (வேறே), என் - யாது, பயன் - பயனை, அடைவரோ - பெறுவரோ, எ - று. ஆல் - அசை.

பொ - ரை. எ - து. வீட்டின்கட்பட்ட அக்கினி யிருந்து பற்றி எரியு முன்னர் அவிப்பவன், அதனை அவித்தலைப் பார்க்குதலே யன்றிக் கலங்க நீ சென்றும், தெளித்த நீ சென்றும், நீரினைப் பருத்தப் பாரான். அது போல், உதாரத்திற் கிருவதற்கு முன்னர், இதனை அவித்தற்கு நீ சென்று கருதி, நாச் சுவை விரும்பி நன்று நீ தென்று பருக்காது, காடிச் சோறாயினும், நல்ல சோறாயினும், பசியை யுடைய தவத்தோன், புசிக்குதல் முறைமை யாம். தவத்தோர் சிரிக்க, வீடு தோறுந் திரிந்து, எனக்குச் சோறு கொடுமி னென்று கேட்டு ஒருவன் நாச் சுவை விரும்பி வாங்கி உண்டலினும், அவ் வயிற்றில் உறு பசியைப் போக்குதலும் அன்றி, அன்னம் உண்டது கொண்டு அதிக மாக வேறே யாது பயனைப் பெறு
எ - று

பிச்சை வாங்கி உண்டலினாலும், வேட் டுண்டலினாலும், பசி போதலே யன்றி, வேறு பயன் இன்மையால், 'அதிக மென் பய னடைவரோ' வென்றார். தவத்தோர்க்கு நாச் சுவை வேட்டு

ப - ரை. எய்தவன் - எய்தவன், உற - இருக்க, எவ்வை - அம்மை, நோவது - நோவது, என் - என்னை, என - என்று, உலகு - உலகத்தார், உரைத்தலின் - (வழக்கமாக எடுத்துச்) சொல்லுதலின். ஒரு - ஒப்பற்ற, தாம் - தாம், செய்து - செய்து, உள - உள்ள, வினைக்கு - நல்வினை தீவினைகளுக்கு, தக்க - தக்க, பேறு - சுக துக்கங்களை இறைவன் - கடவுள், சேர்க்குதல் தனை - கூட்டுகிற முறைமையினை, மறந்து - மறந்து, என்னோ - என்னை போ, உய் - (வீட்டினை அடைந்து) பிழைக்கும், தவம் - தவத்தினை(ப் பண்ண), அறியா - அறியாத, கைதவர் - வஞ்சகர், ஐயம் - பிச்சை, உதவிடார் தமை - கொடாதவரையும், உதவினரை - (அது) கொடுத்தவரையும், வைதல் - வைதல் (செய்தும்), வாழ்த்திடுதல் - வாழ்த்துதல், செய்து - செய்தும், ஒரு - (தமது) ஒரு, சாண் - சாண், வயிறு - வயிறு, நாள் தொறும் - நாடோறும், வளர்ப்பது - வளர்ப்பது, ஏ - ம். மற்று அசை.

பொ - ரை. எ - று. எய்தவன் இருக்க அம்மை நோவது என்னை? யென்று உலகத்தார் வழக்கமாக எடுத்துச் சொல்லுதலின், ஒப்பற்ற தாம் செய்துள்ள நல்வினை தீவினைகளுக்குத் தக்க சுக துக்கங்களைக் கடவுள் கூட்டுகிற முறைமையினை மறந்து, என்னைபோ? வீட்டினை அடைந்து பிழைக்குந் தவத்தினைப் பண்ண அறியாத வஞ்சகர், பிச்சை கொடாதவரையும், அது கொடுத்தவரையும், வைதல் செய்தும், வாழ்த்துதல் செய்தும், தமது ஒரு சாண் வயிறு நாடோறும் வளர்ப்பது, எ - று.

வினைச் செயலை மறந்து, சிவச் செயலை நாடினராகலின், 'எய்தவ னிருக்க வெவ்வை நோவ' தென்றும், அன்னம் நாடிப் பிச்சை யுதவிடாரையும், உதவினோரையும், வைதலும், வாழ்த்துதலும், தவத்தோர்க்கு இழிவாகலின், 'சாண் வயிறு நாடோறும் வளர்ப்பதுவே' என்றும் கூறினர். (௮௧)

தன்னரு குறுசேய் சிரத்தோ ரங்குலியாற் றொன்
புடைத் தொருவன்மீ தொருவன், சொன்னமாந் திரத்தி
னவனையச் சேயுந் துணிவுகொ டெழுந்தறை குதல்போல்,
முன்னவன் விளையாட் டாயவைந் தொழிற்கு முன்னிலை
யாயசீ வரைப்பார்த், தின்னல்செய் சாப மிட்டுமா தவரு
மென்கொலோ தவமிழப் பதுவே. (82)

ப - ரை. ஒருவன் - ஒருவன், தன் - தனது, அருகு - அருகே, உறு - இருக்கின்ற, சேய் - சிறு பிள்ளையினது, சிரத்து - சிரத்தில், தான் - தான், ஓர் - ஒரு, அங்குலியால் - விரலால், புடைத்து - தெறித்து, ஒருவன் - (பிறன்) ஒருவனை (க் காட்டி), மீது - (அவன்) மீதே, சொன்ன மாந்திரத்தின் - சொன்ன மாத்திரத்தில், துணிவு - (அதனை அறியாமையிலும்) மெய் (என்று), கொடு - (கருதிக்) கொண்டு, அவனை - அவனை, அ - அந்த, சேயும் - சிறு பிள்ளையும், எழுந்து - எழுந்து இருந்து, அறைகுதல் - அறைகுதல், போல் - போல், முன்னவன் - கடவுளது, விளையாட்டு - திரு விளையாட்டு, ஆய - ஆகிய, ஐ - பஞ்ச, தொழிற்கு - கிருத்தியத்தில், முன்னிலை - (சீவர்கள்) முன்னிலை, ஆய - ஆக (த் தான் செய்த தீவினைகளுக்கு ஈடாகத் துன்பஞ் செய்ததை மறந்து), சீவரை - (சீவர்கள் தஞ் செயலாகச் செய்தா ரென்று கருதி) அவரை, பார்த்து - நோக்கி, இன்னல் - துன்பம், செய் - செய்யாநின்ற, சாபம் - சாபம், இட்டு - இட்டு, மாதவரும் - மாதவத்தினை யுடைய முனிவோரும், என் கொலோ - என்ன அறியாமையோ, தவம் - (தாம் அருமை யாகச் செய்த) தவங்களை, இழப்பது - இழந்து போவது, எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. ஒருவன் தனது அருகே யிருக்கின்ற சிறு பிள்ளையினது சிரத்தில், தான் ஒரு விரலால் தெறித்துப் பிற னொருவனைக் காட்டி, அவன் மீதே சொன்ன மாத்திரத்தில், அதனை

அறியாமையினால் மெய்யென்று கருதிக் கொண்டு, அவனை அந்தச் சிறு பிள்ளையும், எழுந் திருந்து அறைகுதல் போல், கடவுளது திரு விளையாட் டாகிய பஞ்ச கிருத்தியத்தில், சீவர்கள் முன்வினை யாகத் தாஞ் செய்த தீ வினைகளுக்கு ஈடாகத் துன்பஞ் செய்தலை மறந்து, சீவர்கள் தஞ் செயலாகச் செய்தா ரென்று கருதி, அவரை நோக்கித் துன்பஞ் செய்யாநின்ற சாப மிட்டு, மாதவத்தினை யுடைய முனிவோரும் என்ன அறியாமையோ? தாம் அருமையாகச் செய்த தவங்களை இழந்து போவது, எ - று.

மாதவரு மென்ற சிறப் பும்மையால், சிவச் செயலை நோக்காது, சிவச் செயலை நோக்குதல் யாவர்க்கும் அரி தென்பதும், சிவச் செயலை நோக்குவார்க்கு இம்மையில் தவ மிழவாமையின், மறுமை யிற் பிறவித் துன்பம் இன் றென்பதுங் காண்க.

'சாபமிட்டு மாதவரு மென்கொலோ தவ மிழப்பது' என்ற தற்கு உதாரணம்: அஞ்ஞ வதைப் பரணி. (61) "கோப மிக்க பேர தேவ ராதவர்—குறுகு வோர்தமைக் கொடிய சாப்புகுஞ், சாப மிட்டுவை தவர்க ளாயினும்—நிலைமை மிக்கதற் றவமி ழப்பரே." எ - ம், மற்றும் வருவனவற்றுங் காண்க. (அஉ)

பெண்ணைவிட் டகலா வொருவிடன் றன்னைப் பிறர் வழக் கிளிற்கொடு போகக், கன்னைவிட் டகலா தவன் வரல் போதும் கண்டுகொண் டேகியாங் கனைத்தல், வண்ணமா ரிழஞ்சிக் கொத்தினின் முடித்தல் வகைதயான் மதிதரா மானப், பண்ணிய சமாதி விடுத்தறி வுருந்தம் பரிதவித் தழையுறும் பரிசே. (83)

ப - ரை. பெண்ணை - (அழகினால் மிகுந்ததொரு) பெண்ணை, விட்டு - (கணப்போதாயினும்) விட்டு, அகலா - நீங்காத, ஒரு - ஒரு, விடன் தன்னை - காமுகனை, பிறர் -

அறிஞர் மிகவும் விரும்பி ஒரு கணமாயினும் விட்டு நீங்காது ஞானசமாதியைக் கூடியிருத்தலின், 'பெண்ணை விட்டகலா வொரு விடன்' என்றும், பசியினாற் பிச்சையைக் குறித்துப் பிராரத்த வசத்தனாய்ச் செல்லுகின்ற போது மாத்திரங்கண் அந் நிட்டை நீங்காது செல்லுதலின், 'கன்றை விட்டகலா தவள் வால் போலுங் கன்றுகொண் டேறி' என்றும், நாச் சுவை விரும்பாது காடி கூழேதாயினும் வந்ததைச் சீக்கிரத்தில் வாங்கி உண்டு பசியை மாற்றி மீண்டும் வந்து சமாதியைக் கூடி யிருத்தலின், 'ஆங்கஃ தெவ் வண்ண மாயினுஞ் சீக்கிரத்தினின் முடித் தல் வினைதயான் மதிதரன் மான' என்றும், உவமை கூறினர். (அ௩)

நடந்துறங் கொருவன் றனைமலர் ரமளி நண்ணுமா
புரியின்மற் றவனுங், கிடந்துறங் குவதைக் குறித்துமுன்
னுறக்கம் விழித்தவா றெக்குதல் போலுந், தொடர்ந்
தொருகணமு மிடைவிடா ஞான நிட்டையைத் தூயதஞ்
சமாதி, யடைந்தனர் விடுத்தா ரென்பரே காந்த மவர்க்கது
கூவமா தனியே. (84)

ப - ரை. நடந்து - நடந்து (செல் போது), உறங்கு - நித்திரை பண்ணும், ஒருவன் றனை - ஒருவனை, மலர் - புட்ப, அமளி - சயனத்திலே, நண்ணுமா (று) - இருக்கும்படி, புரியில் - செய்யில், மற்றவனும் - மற்றவனும், கிடந்து - (பின்பு) படுத்துக் கொண்டு, உறங்குவதை - நித்திரை பண்ணுவதை, குறித்து - பார்த்து, முன் - முன்பு, உறக்கம் - (நடந்த போது பண்ணு நித்திரையை, விழித்த ஆ (று) - விழித்துச் சென்ற வெக்குதல் - சொல்லுதல், போலும் - போலும், தொடர்ந்து - (மனத்தால்) தொடர்ந்து (பற்றி), ஒரு - ஒரு, கணமும் - கணமா யினும், இடைவிடா - இடைவிடாத, ஞான - ஞான, நிட்டையை -

நிஷ்டாபரனை, தூய - நின்மல மாகிய, தம் - தமது, சமாதி - சமாதியை, அடைந்தனர் - அடைந்தனர் (என்றும்), விடுத்தார் - விடுத்தனர் (என்றும்), என்பர் - சொல்லுவர், ஏகாந்தம் - ஏகாந்தம், அவர்க்கு - அவர்களுக்கு, அநுகூலம் - அநுகூலம், ஆதலின் - ஆகலின், எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - து. நடந்து செல் போது நித்திரை பண்ணும் ஒருவனைப் பட்ட சயனத்திலே இருக்கும்படி செய்யின், மற்றவனும் பின்பு படுத்துக் கொண்டு நித்திரை பண்ணுவதைப் பார்த்து, முன்பு நடந்த போது பண்ணிய நித்திரையை விழித்துச் சென்ற வாறுகச் சொல்லுதல் போலும், மனத்தால் தொடர்ந்து பற்றி ஒரு கண மாயினும் இடைவிடாத ஞான நிஷ்டாபரனை, நின்மல மாகிய தமது சமாதியை அடைந்தன ரென்றும், விடுத்தன ரென்றும், சொல்லுவர் ஏகாந்தம் அவர்களுக்கு அநுகூல மாகலின், எ - று.

நடந் துறங்குவோனுக்கு மல சயனி அவ் வுறக்கத்தில் அநு கூல மாவது போல், நிற்றல் நடத்தல் ஓடல் முதலிய காலத்தும் இடைவிடாத ஞான நிஷ்டருக்கு, இருந்து நிஷ்டை கூடல் அநுகூல மென்பதும், நடந் துறங்குவோனுக்கு இடையிலே ஓ ரோர் நினைவு தோன்றுதல் போல், நிற்றல் நடத்தல் முதலிய காலத்தும் ஞான நிஷ்டை விடாதோர்க்கு இடை யிடையே ஓ ரசைவு மனத்தின்கண் தோன்று மென்பதும் காண்க.

'தொடர்ந்தொரு கணமு மிடைவிடா ஞான நிட்டர்' என்ற தற்கு உதாரணம்: திரு மந்திரம். (62) "சிற்றவை சுத்தங் கடந்தன வையோடும், பெற்றவக் காலத்தி லுணர்வோ ராமெய்ச், சத்திய ஞானத் தானத் தகவே, பற்றலி [illegible] ஞான நிட்டையே." எ - ம், வரும். மற்றும் வருவனவற்றுங் காண்க. (அஉ)

ப - ரை. தென் - (புகாத்த காலம் வந்து ஏழ் கடலும் ஒன்றாகித்) தென், பரவையின் - கடல், உள் - உள், கழி - (கிடக்கின்ற) கழி, வட - வட, பரவை - கடல் (உள்), சேர் - கிடக்கின்ற, நுகத் துளையினில் - நுகத் துளையின் (வழியே தெய்வ கதியாகச்), செலல் - செல்வது, போல் - போல், ஒன்பதிற்று ஒன்பதோராயிர இலக்கம் - எண் பத்து நான்கு நூறாயிரம், உள - (பேதமாய்) உள்ள, யோனியும் - கருப்பங்க டோறும் (அளவிறந்த காலம் பிறந்து பிறந்து சுழன்று அலை வெள்ளம்), பிழைத்து - தப்பி, ஏறி - கடந்து, பின் - பின்பு, இது - இந்த, பிறப்பு - மானுடப் பிறவியை, பெற்று - (அரிதாகப்) பெற்று, அதனிலும் - இப் பிறப்பு அடைந்த நாள்களுள்ளும், பாதி - பாதி (நாள்), பிறப்பு - பிறப்பு, உறா - அடையாத, நவது - நாளாக, ஆக்குநரின் - (நித்திரை பண்ணிப்) போக்குவார் போல், ஈது - இந்த நித்திரையை, இன்பம் - இன்பம், என - என்று (கருதி), மிக்கு - மிகுந்த, உறங்குவர் - நித்திரை பண்ணுவர்கள், பிறவிக்கு - பிறவித் துன்பத்திற்கு, அற - மிகவும், வெரீஇ - பயந்து, உளம் - உள்ள, துளங்கிடுவோர் - நடுக்குறுவோர், எ - று.

பொ - ரை. எ - று. புகாத்த காலம் வந்து ஏழ் கடலும் ஒன்றாகித் தென் கடலுட் கிடக்கின்ற கழி வட கடலுட் கிடக்கின்ற நுகத் துளையின் வழியே தெய்வ கதியாகச் செல்வது போல், எண் பத்து நான்கு நூறாயிரம் பேதமாயுள்ள கருப்பங்க டோறும் அளவிறந்த காலம் பிறந்து பிறந்து சுழன்று, அலை வெள்ளம் தப்பிக் கடந்து, பின்பு இந்த மானுடப் பிறவியை அரிதாகப் பெற்று, இப் பிறப்பு அடைந்த நாள்களுள்ளும் பாதி நாள் பிறப்படையாத நாளாக நித்திரை பண்ணிப் போக்குவார் போல், இந்த நித்திரையை இன்பமென்று கருதி மிகுந்த நித்திரை பண்ணுவர்கள், பிறவித் துன்பத்திற்கு மிகவும் பயந்து உள்ள நடுக்குறுவோர், எ - று.

மாதுடைப் பிறவி பெற்றும், ஞான சமாதி கூடுதல் மிகவுந் துர்லப மாகலின், இப் பிறப்பு அடைந்த நாள்களைச் சமாதி கூடிக் கழித்தலே யன்றி, வீணாள்க ளாகக் கழிக்க லாகா தென்பது காண்க. (௮௬)

அறவுநித் திரையைத் துறந்திடி னுடற்க ணடை
தரும் பிணிகண்மற் றதனாற், குறைதலு மிகலு மின்றி
யோர் சமமாக் கொண்டுகண் டுயின்றபின் விழிக்கி,
னுறுசகா தகத்தி லெழுதுசித் திரமொத் துறைகுவ
ரிறைதலை கழுத்தூன், செறியுடல் வாங்கா தோங்கநே
ரவர்பாற் சேருமோ காமநோய் சிறிதும். (87)

ப - ரை. அறவு - மிகவும், நித்திரையை - நித்திரையை, துறந்திடின் - துறந்தால், உடற்கண் - தேகத்தின்கண், பிணிகள் - வியாதிகள், அடைதரும் - வந்து பொருந்தும், அதனால் - அதனால், குறைதலும் - குறைதலும் (இன்றி), மிகலும் - மிகுதலும், இன்றி - இன்றி, ஓர் - ஒரு, சமம் - சமம், ஆ - ஆக, கொண்டு - கொண்டு, கண் துயின்று - நித்திரை பண்ணி, பின் - பின்னர், விழிக்கில் - விழிக்கு மிடத்து, உறு - பொருந்திய, சகாதகத்தில் - சகாதகத்திலே, இறை - இறை யளவாயினும், தலை - தலையும், கழுத்து - கழுத்தும், ஊன் - ஊன், செறி - செறிந்த, உடல் - உடலும், வாங்காது - வளையாது, நேர் - நேரே, ஓங்க - ஓங்க, எழுது - எழுதிய, சித்திரம - சித்திரம், ஒத்து - போல், உறைகுவர் - இருப்பார், அவர்பால் - அவரிடத்து, சேருமோ - வந்து அடையுமோ, காம - காம, நோய் - வியாதி, சிறிதும் - சிறி தாயினும், எ - று. மற்று - அசை.

பொ - ரை. எ - து. மிகவும் நித்திரையைத் துறந்தால் தேகத்தின்கண் வியாதிகள் வந்து பொருந்தும், அதனால் குறைதலு மின்றி, மிகுதலு மின்றி, ஒரு சம மாகக் கொண்டு நித்திரை

பண்ணிப், பின்னர் விழிக்கு மிடத்துப் பொருந்திய சுகாதனத்திலே, இறை யசை வாயினும் தலையும், கழுத்தும், ஊன் செறிந்த வுடலும், வளையாது, நேரே நன்கு எழுதிய சித்திரம் போல் இருப்பார், அவரிடத்து வந் தடையுமோ காம வியாதி சிறிதாயினும், எ - று.

'சுகாதனம்' என்றது தமக்குக் கைவந்த பத்மாசன முதலிய ஆசனங்களை. இதனுட் கூறிய இலக்கணத்தோடும் ஆதனங் கட்டிச் சமாதியில் இருப்போர்க்குக் காமம் வந் தடையா தென்பது காண்க.

'குறைதலு மிகலு மின்றியோர் சமமாகக் கொண்டுகண் ணின்று' என்றதற்கு உதாரணம்: பரமார்த்த தரிசனம். (பகவற் கீதை) (64) "எண்டிகழு மியோகத்தை யிப்பரிசே யெப்பொழு தும், கொண்டு பயில் வார்கடைக்கா லென்னையே கூடுவார, துண்டியிலின் மிகுவாருண் டிறப்பாரயிக் குறங்கிடுவோர், கண் விழிவ பறந்துறப்பா ரவர்க்கிதுவை வாராதால்." எ - ம், தத்துவ ராயர் அமிர்த சாரம். (65) "செவ்வே யுடலுஞ் சிரமுங் கழுத்து முற, வெவ்வா நாசி நுனி யிருந்தவர்க்கும் - கைவந்தால், வாத முதலேனும் எவியா மதியுடையோ, ராதர மென்ப தது." எ - ம், வரும். மற்றும் வருவனவற்றுங் காண்க. (அஎ)

உறக்கமும் பசியு மிகுத்திடிற் காம முற்றிடா தற்ற
போழ் துன்னை, மிறக்குமோவன் சமாதி யடைதலி னடையா
விடையிறு மடுபவத் துயரை, மறக்கலா மையிரு லச்சமும்
விட்டடை மதித்தலை விச்சையு முடனே, வெறுக்குநிக்
கிரகத் தாற்களிப் பறலு மேவலான் மேவிடா ததுவே.(88)

ப - ரை. உறக்கமும் - நித்திரை (மிகுந்த காலத்தும்), பசியும் - பசி, மிகுந்திடில் - மிகுந்த காலத்தும், காமம் - காமம்,

உற்றிடாது - (வந்து) பொருந்தாது, அற்ற - (அந்த நித்திரை பசி) இல்லாத, போழ்து - காலத்தும், ஒன் - ஒள்ளிய, சமாதி - (ஞான) சமாதி. அடைதலின் - கூடுதலின், உள்ளம் - உள்ளம், இறக்கும் - இறந்து போமாகலின், அடையா - (அஃது) அடையாது. [அந் நித்திரை பசி சமாதிகளுக்கு இடையிடையே காமந் தோன்றுதோ வென்னின்,] இடையிலும் - (அவ்) இடையிலும், அடு - வருத்தா நின்ற, பவ - பிறவி, துயரை - துன்பத்தை, மறக்கலாமையினும் - மறவாமையால், அச்சமும் - பயமும், வீட்டை - வீட்டின்பத்தை (என்றைக்கு அடைவேமோ வென்று அதனை), மதித்தலால் - கருதுதலால், இச்சையும் - ஆசையும், உடலை - (அச்ச பயாதிகளை ஒறுத்தல் முதலியவற்றால்) உடலை, வெறுக்கு - வெறுக்கு, நிக்கிர கத்தால் - நிக்கிரகத்தால், களிப்பு - (மதச்) செருக்கு, அறலும் - இன்றியிருத்தலும், மேவலால் - பொருந்துதலால், அது - காம வேள்; மேவிடாது - பொருந்தாது, எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. நித்திரை யிருந்த காலத்தும், பசி யிருந்த காலத்தும், காமம் வந்து பொருந்தாது. அந்த நித்திரை பசி இல்லாத காலத்தும், ஒள்ளிய ஞான சமாதி கூடுதலின், உள்ள மிறந்து போமாகலின், அஃது அடையாது. அந்த நித்திரை பசி சமாதிகளுக்கு இடையிடையே காமந் தோன்றுதோ வென்னின், அவ் விடையிலும் வருத்தாநின்ற பிறவித் துன்பத்தை மறவாமை யால் பயமும், வீட்டின்பத்தை என்றைக்கு அடைவேமோ வென்று அதனைக் கருதுதலால் ஆசையும், அச்ச பயாதிகளை ஒறுத்தல் முதலியவற்றால் உடலை வெறுக்கு நிக்கிரகத்தால், மதச் செருக் கின்றி யிருத்தலும் பொருந்துதலாற், காம வேள் பொருந் தாது, எ - று.

நித்திரை யிருந்த விடத்தும், சமாதி கூடி யவிடத்தும், மனம் இறத்தலினாலும், பசி யிருந்த விடத்தும், உடலை [illegible]

உடல் - (மாசு பொருந்து) உடல், குலையும் - நடுக்குறும், ஒரு - ஒரு, மகன் - (சுத்த) புருஷனானவன், மலம் - மலங்களே, நிறைந்த தன்ன தடாகம், புக்கு - புகுந்து, ஆடவும் - மூழ்கவும், எடுமே - நினைப்பனோ, அது போல் - அவன் போல், பொங்கு - (உள்ளே) நிறைந்த, புல் - புல்லிய, மல - மலங்கள் (புறத்திலே நவத் துவாரங்களிலும் கசிந்து ஒழுகாநின்ற), ஊன் - மாமிச, பொதி - சுமை (ஆகிய), இது - இதனை, என்று - என்றைக்கு, ஒழிப்பல் - நீக்குவேன், என - என்று, அருவருத்து - (உள்ளத்தில்) அருவருப்புடனே, உடல் - உடலை, பொறுக்கும் - தாங்காநின்ற, துங்க - உயர்ச்சி பொருந்திய, மாதவற்கும் - மாதவத்தினை யுடையவனுக்கும், எங்ஙனம் - எப்படி, மடவார் - மடவாரை, தோயவும் - கூடவும், நேயம் - அன்பு, உன் - மனத்தின்கண், தோன்றும் - தோன்றும், எ - று. மற்று - அசை.

பொ - ரை. எ - து. எவ்விடத்தில் உள்ளது நீர் இதனைக் கழுவுதற் கென்று, காலினிடத்துப் பட்ட அசுத்தத்திற்கு, அவ்வசுத்தம்பட்ட அவ்விடத்திலே தானே, மாசு பொருந்து உடல் நடுக்குறும் ஒரு சுத்த புருஷனானவன், மலங்களே நிறைந்த தன்ன தடாகம் புகுந்து மூழ்கவும் நினைப்பனோ, அவன் போல், உள்ளே நிறைந்த புல்லிய மலங்கள், புறத்திலே நவத் துவாரங்களிலும் கசிந்து ஒழுகாநின்ற மாமிசச் சுமை யாகிய இதனை, என்றைக்கு நீக்குவேனென்று உள்ளத்தில் அருவருப்புடனே, உடலைத் தாங்காநின்ற உயர்ச்சி பொருந்திய மாதவத்தினை யுடையவனுக்கும், எப்படி மடவாரைக் கூடவும் அன்பு மனத்தின்கண் தோன்றும், எ - று.

காலிற் படும் அசுத்தத்திற்கு உடல் குலைந்து நீர் தேடும் ஒரு மகன், மல தடாகத்தில் மூழ்க [illegible] பொதி யென்று அறிந்து, இதனை என்றைக்கு [illegible]

ப - ரை. பெற்ற - (தன்னைப்) பெற்ற, தாய் - தாய், முதலோர் - முதலானோரை, புரைய - போல, மாதரை - மாதர்களை (எல்லாம்), எண் - கருதாநின்ற, பெரும் - பெரிய, துறவு - துறவினை, அடைந்துளோன் - அடைந்தவன், தவழும் - தவழ்கின்ற சிற்று - சிறிய, ஒரு - ஒரு, பிள்ளை - பெண்ணினை, தன் - தனது, மனை - மனைவி, என - என்ற, விரோத - விரோத, திறத்து - முறைமையால், உரைப்பினும் - சொல்லினும், முனம் - முன்னம், கிரகத்து - இல் வாழ்க்கையில், உற்ற - இருந்த, நாள் - காலத்து, தனது - தனது, மகன் தனை - மகனை, அவனம் - அங்ஙனம், உரைத்திடாமையில் - சொல்லாமையினால், பழுது - (அங்ஙனம் சொல்வதும்) குற்றமாம், என்றால் - என்றால், பொன் - பொன்னால் (ஆகிய), தொடியவர் - தொடியினை யுடையாரது, தோள் - தோளினை, தழுவவும் - அணையவும், விழைதல் - (மனத்தின்கண்) விரும்புதல், புரியின் - செய்யின், அவ் அறம் - அத் துறவறத்தினை, என் ஆம் - எதனோடு சேர்த்தல் ஆகும், எ - று. 'மகன் தனை' என்பதில் தன் - ஏ - சொல் - அசை.

பொ - ரை, எ - அ. தன்னைப் பெற்ற தாய் முதலானோரைப் போல, மாதர்களை யெல்லாம் கருதாநின்ற பெரிய துறவினை அடைந்தவன், தவழ்கின்ற சிறிய வொரு பெண்ணினைத் தனது மனைவி யென்ற விரோத முறைமையாற் சொல்லினும், முன்னம் இல் வாழ்க்கையி லிருந்த காலத்துத் தனது மகனை அங்ஙனம் சொல்லாமையினால், அங்ஙனம் சொல்லுவதும் குற்றமா மென்றால், பொன்னா லாகிய தொடியினை யுடையாரது தோளினை அணையவும், மனத்தின்கண் விரும்புதல் செய்யின், அத் துறவறத்தினை எதனோடு சேர்த்த லாகும், எ - று.

துறவறத்திற்கு மகளிரை விழைதல் மிகவு மகாரமையால், அத் துறவறம் போய நாய் வைத்தும், அதனைப் பிரசங்கியம்,

நெஞ்சகத்திலே வஞ்சகத்தை வைத்துக் கொண்டு, தவத் தோர் வேடம் போல், வாக்குக் காயங்களில், நெஞ்சகத்தைப் பிரித்து பிறர்க்குக் காட்டு வேடத்து உரிய னாகிய ஒருவன், தனது மிகுந்த ஆசை யெப்படியோ, அப்படி இம்மையிலும் செய்யக் கூடாத படியினாலும், உடம்பினை நீங்கிய மறுமைக் காலத்திலும், யம தூதுவர் நரகத்தில் வீழ்த்தி வருத்தலினாலும், எ - று.

கற் புடைய மகளிருக்கு இம்மை மறுமைகளிலும் இன்பம். பரத்தையருக்கு இம்மையில் இன்பம். வியபிசார மாதருக்கு இம்மை மறுமைகளிலுந் துன்பம். அவர் போலச் சுத்த தவத்தினர்க்கு பூசை முதலியவற்றால் இம்மையிலும், தபோ பலத்தால் மறுமையிலும் இன்ப மென்பதும், இல் வாழ்வானுக்கு இம்மையில் இன்ப மென்பதும், கூடா வொழுக்கம் உடையோனுக்கு இம்மை மறுமைகளிலும் துன்ப மென்பதும் காண்க. வியபிசார மாதர் தன்மை போல், நெஞ்சகத்தைப் பிரி வேடமுடையோன் தன்மையு மிருத்தலிற், 'பரத்தையருமலாத் தெரிவையர் புவிமேற் பிறந்த வாட் பிறந்தான் போலும்' என்றார். 'எங்குள புனன் மற்' றென்பது முதல், இந் நான்கு பாட்டாலும் தவத்தோர்கள மனம் விழிமெய் களினால் மகளிரை நினைக்க லாகா தென்றும், பார்க்க லாகா தென்றும், கூட லாகா தென்றும் கூறிய வாறு காண்க. (கஉ)

மைப்படு விழியா ரின்பமோர் முன்னி மலரின்வாய்த்
தேனேயொப் பெனக்கண், டொப்பில்பே ரின்பம் வேண்டி
னோன் வேண்டிப் புலகர்வே றனைகொடுத் திடினுந்,
அப்பமற் றடுப்ப விரண்டுமே யன்றித் தொடுவனோ
பிறிதிவற் றினுக்கச், குப்பைசா ரிடம்புக் கிடுதலி னவற்
றைக் குறித்தெரோ விடம்புகா மையினே. (93)

ப - ரை. மை - மை, படு - பொருந்திய, விழியார் கண்ணினை யுடைய மாதரால் (வரும்), இன்பம் - இன்பம், ஓர் - ஒரு, முள்ளி - முள்ளி, மலரின் வாய் - மலரின்கண் (உள்ள), தேனை - தேனுக்கு, ஒப்பு - சமானம், என - என்று, கண்டு - கண்டு (துறந்து), ஒப்பு - ஒப்பு இல் - அற்ற, பேர் இன்பம் - பேரின்பத்தை, வேண்டினேன் - (அடைய) விரும்பினேன், உலகர் - உலகத்தார், வேண்டி - (தன்னை) வேண்டி (க் கொண்டு), வேறு - வேறே, எவை - எவற்றினை, கொடுத்திடினும் - கொடுத்தாராயினும், துய்ப்ப - உண்பனவும், உடுப்ப - உடுப்பனவும் (ஆகிய), இரண்டுமே - இரண்டுமே, அன்றி - அன்றி, பிறிது - பிறிது (ஒன்றினையும்), தொடேனே - (கையினாலும்) தீண்டேனே, [ஆனால் இவை யிரண்டையும் வாங்கலாமோ வென்னில்] இவற்றினுக்கு - இவற்றினைக் குறித்து, மனர் - மனரிடத்தும், குப்பை - குப்பை, சார் - சார், இடம் - இடத்தும், புக்கிடுதலின் - செல்லு கையால் (இவை வாங்கிக் கொள்ள லாகும்), அவற்றை - மற்றைய வற்றினை, குறித்து - குறித்து, ஒரு ஓர் - ஒரு, இடம் - இடத் திலே, புகாமையின் - செல்லாமையால (அவற்றினை வாங்க லாகாது), எ - று. ஏ - அசை.

பொ - ரை. எ - று. மை பொருந்திய கண்ணினை யுடைய மாதரால் வரும் இன்பம் ஒரு முள்ளி மலரின்க ணுள்ள தேனுக்குச் சமான மென்று கண்டு துறந்து, ஒப்பற்ற பேரின்பத்தை அடைய விரும்பினேன், உலகத்தார் தன்னை வேண்டிக் கொண்டு வேறே எவற்றினைக் கொடுத்தா ராயினும், உண்பனவும், உடுப்பனவு மாகிய இரண்டுமே யன்றிப் பிறி தொன்றினையும், கையினாலும் தீண்டு வேனே, ஆனால் இவை யிரண்டையும் வாங்கலாமோ வென்னில், இவற்றினைக் குறித்து மனரி லிடத்தும், குப்பை சா ரிடத்தும், செல்லுகையால், இவை வாங்கிக் கொள்ள லாகும், மற்றையவற் றினைக் குறித்து, ஒ ரிடத்திலே செல்லாமையால் அவற்றினை வாங்க லாகாது, எ - று.

பிரியம் - (நன்று செய்தா னென்றும், தீது செய்தா னென்றுங் கருதி) விருப்பும், அப்பிரியம் - வெறுப்பும், ஒன்று - சிறி தாயினும், இன்றி - இல்லாமல், வினை - (தனது) நல்வினை தீ வினைகளுக்கு, வழி - ஈடாக, முனைவன் - (அவன் அவன் அது முன்னிலையாகச் சுக துக்கங்களை யூட்டுதற்கு) இறைவன், புரியும் - செய்யும், ஐ - பஞ்ச, தொழில் - கிருத்தியம் (என்று அறிந்து), விதத்தையே - (அப் பஞ்ச கிருத்தியம் செய்யும்) விதத்தையே, நோக்கி - பார்த்து, உள் - உள்ளே, மகிழும் - மகிழ்ந்து (இருப்பான்), எ - று.

பொ - ரை. எ - று. பிற னொருவன் வந்து தன்னை மிகவும் வருந்தி வேண்டிக் கொண்டு, சந்தன முதலிய பூசி, நானாவித புஷ்ப மணங்களினால் இயற்றப்பட்ட மாலைகளைத் தரித்தா னாயினும், அவை யன்றிக், கோபித்து இழுத்து வைது அடித்து உதைத்து உடம்பின் கண்ணே பின்னர் மல முதலியவற்றைப் பூசினா னாயினும், அந்தத் தவத்தினோன், நன்று செய்தா னென்றும், தீது செய்தா னென்றும் கருதி, விருப்பும் வெறுப்பும் சிறி தாயினும் இல்லாமல், தனது நல் வினை தீ வினைகளுக்கு ஈடாக அவன் அவன் அது முன்னிலை யாகச் சுக துக்கங்களை யூட்டுதற்கு இறைவன் செய்யும் பஞ்ச கிருத்திய மென்று அறிந்து, அப் பஞ்ச கிருத்தியஞ் செய்யும் விதத்தையே பார்த்து உள்ளே மகிழ்ந்திருப்பான், எ - று.

'ஒருவன் சந்தன மாதிய பூசி மின்னலர் மாலை புனைகினும் முனியா விழுத்தலை தடித் துதைத் துடலிற் பின்ன மலமதி பூசினும்' என்றதற்கு உதாரணம்: பெருந்திரட்டு (68) "வைதினும் வாழ்த்தினு மன்னொரு [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible]." என்பதும். [illegible] [illegible] [illegible] [illegible]

தந்தைதாய் பலமா தியகொடுத் திடவுந் தக்கைபுண் செவியினுக் கிடவு, மைந்தவா வெனனுங் குதித்தெழுந் தோடி வருதல்போ குதல்செயு மகவின், ஐந்தொழில் புரியு மெந்தையூழ் வழியிற் றருள்சுக மாதிய வருங்காற், சிந்தையுள் விழைந்து முற்செலா ரழிந்து பிற்செலார் மாசறத் தெளிந்தோர். (95)

ப - ரை. தந்தை - தந்தையும், தாய் - தாயும், பலம் - (முப்) பழம், ஆதிய - முதலிய (பழங்களை), கொடுத்திடவும் - கொடுக்கவும், புண் - புண் (பொருந்திய), செவியினுக்கு - செவிக்கு, தக்கை - தக்கை, இடவும் - இடவும், மைந்த - மைந்த, வா - வா, எனனும் - என்று அழைத்தவுடனே, குதித்து - குதித்து, எழுந்து - எழுந்து, ஓடி - ஓடி, வருதல் - வருதலும், போகுதல் - (குதித் தெழுந் தோடிப்) போகுதலும், செயும் - செய்யும், மகவின் - பிள்ளை போல், ஐ - பஞ்ச, தொழில் - கிருத்தியங்களையும், புரியும் - பண்ணுகின்ற, எந்தை - எமது (தந்தை யாகிய) இறைவன், ஊழ் - ஊழ், வழி - வினைப்படியே, ஈந்து - கொடுத்து, அருள் - அருளிய, சுகம் - சுக, ஆதிய - துக்கங்கள், வரும் காலை - வரு மிடத்து, சிந்தையுள் - (சுகம் என்று) மனத்தின் கண், விழைந்து - விரும்பி, முன் - முன், செலார் - சென்று பற்றார், அழிந்து - (துன்பம் என்று மனத்து சடு) அழிந்து, பின் - பின், செலார் - சென்று இடையார், மாசு - (மூக்) குற்றங்களும், அற - அற, தெளிந்தோர் - (வேத ஆகமங்களைத்) தெளிந்த பெரியோர், எ - று.

பொ - ரை. எ - று. தந்தையுந், தாயும் முப் பழ முதலிய பழங்களைக் கொடுக்கவும், புண் பொருந்திய செவிக்குத் தக்கை யிடவும், மைந்த வா வென்று அழைத்த வுடனே, குதித் தெழுந் தோடி வருதலும், குதித் தெழுந் தோடிப் போகுதலும், செய்யுஞ்

அவனே - (படைத்துக் காக்கும்) அவனே, பினும் - பின்னரும், அழிக்கின் - அழிக்குமிடத்தில், இவண் - இந் நிலத்தின்கண், வைத்து - வைத்து, புரப்பார் - காப்பார், இலை - (ஒருவரும்) இல்லை, எனும் - என்னும், துணிவு - நிச்சயம், மகத்தினுள் - (அவாது) மகத்தின்கண்ணே, இருத்தலின் - இருத்தலினால், எ - று. மற்று - அன்று - ஏ - அசை.

பொ - ரை, எ - று. இந்தப் பூமியின்கண்ணே பாழ்ங் கோயில் இருள் மிகுந்த மலைக் குகை முதலிய இடங்களிலே, பரிசுத்த மாகிய சத்திய தவத்தோர், எக் காலத்திலே சென் றிருந்தா ராயினும், அவ் விடத்திலே பாம்பு முதலியவற்றால் துன்பம் வரு மென்று, அவாத மகத்தின்கண்ணே பயந் தோன்றாது. இறைவன் தான் படைத்த இவ் வுடலைக் காக்கு மளவில், அழிப்பார் ஒருவரும் இல்லை; படைத்துக் காக்கும் அவனே பின்னரும் அழிக்கு மிடத்தில், இக் நிலத்தின்கண் வைத்துக் காப்பார் ஒருவரும் இல்லை; என்னும் நிச்சயம் அவாத மகத்தின் கண்ணே இருத்தலினால், எ - று.

இதனுன்னே, பாழ்ங் கோயில் முதலிய விடங்களிலே, ஏகாந்த மா யிருக்கும் போது, இராக் காலங்களினும் சிவச் செயலை காடிப் பயப்படா திருக்க வேண்டு மென்று கூறிய வாறு காண்க. (கஅ)

ஊனேபோம் புதல்கை விடுத்துனே புலப்பா ருணர்வ சென் றுடைய நம்பி, தானுரைத் தமையா னுடன் விழைவ் இதனைத் தத்துவ நிலைபுங்கை தவறி, நீசமார் பிறப்புத் திடுவினர் தொழிற்கு மிறையதி காகியென் றென்று, ஞானமொன் றனேயே தொடருமோர் புருட னன்னுவன் பாகதி நின்னைம். ([illegible])

கண் வந்து), ஒன்று - ஒரு, உற்பவமது - சகாம், இரண்டில் - இரண்டு (சகாத்திலே பரிபூரண ஞானத்தைப் பெற்று), சிவமது - சிவத்தினை, அடைவன் - அடைவான், எ - று. "சிவமது, உற்பவமது, என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி," மற்று - அசை.

பொ - ளை. எ - து. உள்ளது ஒளிப்பினும் உண்டாம், இல்லது ஒரு காலத்தும் இல்லை யென்று, திரு வெண் காடாபவர் ஓதுதலினாலே, பொருந்தாநின்ற ஊழ் வினையை யாவராலும் தள்ளக் கூடாமையால், தான் தவத்தினைப் பண்ணும் காலத்தில், அந்த ஊழ் வினை எந்த விதத்தா லாயினும் வந்து பொருந்தித் தன் னுடம்பினையும், உயிரினையும் வேறுக்குதல் செய்தாலும், ஞான சாதக னானவன், தன் னுள்ளத்தின்கண் மேவிய அந்தச் சுத்த வாதனை படவே வைத்த லோகங்களிலே சென்றிருந்து அந்த போகங்களை அநுபவித்துப், பின்னர் மீண்டும் பூமியின்கண் வந்து, ஒரு சகாம், இரண்டு சகாத்திலே, பரிபூரண ஞானத்தைப் பெற்றுச் சிவத்தினை அடைவான், எ - று. (௯௮)

அருந்தவ விலக்கில் வுடற்பரிப் பதுதா னச்சமா திகடரு மூலர், திருந்தாகஞ் சிந்தை சிவன்கணே யாவர் வரினுமென் றமையிற்பே திப்பான், பொருந்திலும் வாமென ரெதிர்முதிர் கொலையெம் பூதமா தியவனைத் திடினு, மிருந்தநஞ் சமாதி நிலைகுலை யாதோ ரெண்ணிய வெண்ணியாங் கடைவர். (99)

ப - ரை. அரும் - அரிது (ஆகிய). தவ - தவத்திற்கு, விலக்கு - மாறுபாடு, இல் - இல், உடல் - உடம்பினை, தான் - தாம், பரிப்பது - பாது காக்குதல், அச்சம் - (அதனால்) பயம், ஆதிகள் - (ஆசை அபிமானம்) முதலியன, தரும் - (மனத்தின்கண்) உண்டாம் (ஆதலின்), யாவர் - (தவத்திற்கு இடையூறு செய்

தற்கு) யாவர், வரினும் - வந்தா ராயினும், நம் - நமது, சிந்தை - சிந்தை, செவ்வகனே - சிவனது திரு வடியின்கண்ணே, திருந்தும் - திருந்தாநிற்கும், மூலர் என்றமையில் - என்று திரு மூல நாயனார் கூறினமையால், பேதிப்பான் - (மனத்தினைப்) பேதிக்கும் பொருட்டு, எதிர் - (தமது) எதிரே, வானோர் - தேவர்கள், பொருந்தினும் - வந்தா ராயினும், முதிர் - முதிர்ந்த, கொலை - கொலையினை செய்கின்ற, வெம் - வெவ்விய பூதம் - பூதங்கள், ஆதிய - முதலியவை, வளைந்திடினும் - வளைந்து கொண்டன வாயினும், தம் - தாம், இருந்த - இருந்த, சமாதி - சமாதி, நிலை - நிலைமை, குலையாதோர் - வழுவா திருந்தோர், எண்ணிய - (தாம்) எண்ணிய (வீட் டின்பத்தினை), எண்ணி ஆங்கு - எண்ணிய வாறே, அடைவர் - அடைகுவர், எ - று.

பொ - ரை. எ - து. அரி தாகிய தவத்திற்கு மாறுபாடு இவ் வுடம்பினைத் தாம் பாது காக்குதல், அதனால் பயம் ஆசை அபிமானம் முதலியன மனத்தின்கண் உண்டா மாதலின், தவத்தி னுக்கு இடையூறு செய்தற்கு, யாவர் வந்தா ராயினும், நமது சிந்தை சிவனது திரு வடியின்கண்ணே திருந்தாநிற்கு மென்று, திரு மூல நாயனார் கூறினமையால், மனத்தினைப் பேதிக்கும் பொருட்டுத் தமது எதிரே தேவர்கள் வந்தா ராயினும், முதிர்ந்த கொலையினைச் செய்கின்ற வெவ்விய பூதங்கள் முதலியவை வளைந்து கொண்டன வாயினும், தா மிருந்த சமாதி நிலைமை வழுவா திருந்தோர், தாம் எண்ணிய வீட் டின்பத்தினை எண்ணிய வாறே அடைகுவர், எ - று

'இத் தவ' மென்னும் பாட்டு முதல், இந் நான்கு பாட்டானும், தவத்தினோர்கள் தாம் உடம்பினைப் பாது காத்தல் கை விட்டு, இவ் வுடம்பினைப் படைத்த இறைவனே, காத்தலும், அழித்தலும், செய் வான், அவனை யன்றிப் பிற ரொருவராலும், காத்தல் அழித்தல்

ப - ரை. தேவர் - தேவர்களும், மா - மகத்தாகிய, முனிவர் - முனிவர்களும், அசுரர் - அசுரர்களும், அரக்கர் - இராக்கதர்களும், சித்தர் சித்தர்களும், வித்தியாதரர் - வித்தியாதரரும், முதலோர் யாவரும் - (என்று சொல்லாநின்ற) இவர்கள் முதலியவர்களும், சித்தி - (அஷ்டமா) சித்திகளையும், புத்திகளும் - (மேலாகிய வர்த்த) போகங்களையும், விரும்பி - விரும்புங் காலை, அச்சம் - பயம், ஆகிய (ஆசை கோபம் அபிமானம்) முதலியவை, என் - என், தனை - மாத்திர மாயினும், உள் - மனத்தின்கண் மேவுறாது - பொருந்தாது, அகற்றி - மாற்றி, தவம் - தவத்தினை, புரிந்து - பண்ணி, அடைந்தால் - (அவற்றினை) அடைந்தானால், மேலது ஆம் - (அந்தச் சித்தி புத்திகளுக்கு) மேலாய் உள்ள (வீட்டின்ப மாகிய), மூல பண்டாரம் - மூல பண்டாரத்தினை, அவை - அந்தப் பய முதலியவை, ஒவு - (தாமே) விட்டு, அற - நீங்காது, குடி - குடி, கொள் - கொண்டிருக்கின்ற, என் - என், போல் - போலும், நெஞ்சு - மனத்தினை, உடையாரால் - உடையவரால், அடையவும் - அடையவும், படுமே - கூடுமோ, எ - று. 'மேலது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. ஏ - அசை.

பொ - ரை. எ - று. தேவர்களும், மகத்தாகிய முனிவர்களும், அசுரர்களும், இராக்கதர்களும், சித்தர்களும், வித்தியாதரருமென்று சொல்லாநின்ற இவர்கள் முதலியவர்களும், அஷ்டமா சித்திகளையும், மேலாகிய வர்த்த போகங்களையும், விரும்புங் காலைப், பயம் ஆசை கோபம் அபிமானம் முதலியவை என் மாத்திர மாயினும், மனத்தின்கட் பொருந்தாது மாற்றித், தவத்தினைப் பண்ணி, அவற்றினை அடைந்தானால், அந்தச் சித்தி புத்திகளுக்கு மேலாயுள்ள, வீட்டின்ப மாகிய மூல பண்டாரத்தினை, அந்தப் பய முதலியவை தாமே விட்டு நீங்காது, குடி கொண்டிருக்கின்ற என் போலு மனத்தினை யுடையவரால், அடையவுங் கூடுமோ, எ - று. (௬௦௦)

ஒருவனுக் கிருளற் றுரியசிற் சொரூப முள்ளவா விளங்கினன் றறமிப், பருவர அருவப் பற்றறமற் றதனேர் படுமள விறைபுரி தருமைம், கருமமெவ் விடத்துங் கண்டு தற் செயலைக் கைவிடுத் தச்சமா தியவுள், மருவுறு தகற்றித் தவஞ்செயல் வழக்கால் வாழியெங் குரவனீ றெழி. (101)

ப-ரை. ஒருவனுக்கு - ஒரு புருஷனுக்கு, இருள் - (அஞ்ஞான) இருட்டு, அற்று - நீங்கி, உரிய - (தனக்கு) உரிய, சித் - ஞான, சொரூபம் - சொரூபம், உள்ளவா(று) - உள்ள படியே, விளங்கின் - விளங்கு மாயின், இ - இந்த, பருவரல் - துன்பம் செய்யாநின்ற, உருவ - தேக, பற்று - பற்று, அன்று - அன்றைக்கு, அறும் - நீங்கும், அது - அந்த ஞான சொரூபம், நேர் - (தனக்கு) நேராய் (வந்து), படும் - லபிக்கும், அளவும் - அளவும், இறை - இறைவன், புரிதரு - செய்யாநின்ற, ஐ - பஞ்ச, கருமம் - கிருத்தியங்களை, எவ் விடத்தும் - எவ் விடத்திலும், கண்டு - பார்த்து, தன் - சீவ, செயலை - செயலை, கை விடுத்து - விட்டு நீங்கி, அச்சம் - பயம், ஆதிய - முதலிய துர்க் குணங்கள், உள் - மனத்தின்கண்ணே, மருவுறு - பொருந்தாத, அகற்றி - மாற்றி, தவம் - தவத்தினை, செயல் - செய்யவே, வழக்கு - முறைமையாம், எம் - எமது, குரவன் - ஞானாசாரியன், நீடு வழி - நீடு வழி (காலமும்), வாழி - வாழக்கடவன், ஏ - ஐ, மற்று - ஆல் - அசை.

ஸ்ரீ சச்சிதானந்த ஞானாசாரிய ஸ்வாமிகள்

இயற்றிய,

வைராக்ய தீபப் புத்துரை

முற்றுப் பெற்றது.

---

பொ - ரை. எ - து. ஒரு புருஷனுக்கு அஞ்ஞான விருட்டு நீங்கித், தனக் குரிய ஞான சொரூபம் உள்ளபடியே விளங்கு மாயின், இந்தத் துன்பம் செய்கின்ற தேகப் பற்று அன்றைக்கு நீங்கும். அந்த ஞான சொரூபம் தனக்கு நேராய் வந்து லபிக்கு மளவும், இறைவன் செய்கின்ற பஞ்ச கிருத்தியங்களை எவ் விடத்திலும் பார்த்துச், சீவச் செயலை விட்டு நீங்கிப், பய முதலிய துர்க் குணங் கள் மாத்திரங்களையே பொருத்தாது மாற்றித், தவத்தினைச் செய்வதே முறைமை யாம். எமது ஞானாசாரியன் நீடூழி காலமும் வாழக் கடவன், எ - று, (௧0௧)

வைராக்ய தீபப் பொழிப் புரை
முற்றுப் பெற்றது.

---

வைராக்ய தீபம்
முற்றுப் பெற்றது.

